உ
குருவே துணை

# சத்திய சூத்திரம்
# &
# சத்திய வாசகம்

---


ஆசிரியர்:
மகான். வண்ணச்சரபம்
**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**
திருவாமாத்தூர்.



பதிப்பாளர்:
பழனி – கட்டைச் சின்னும்பட்டி
நிலக்கிழார்
**திரு. அ. பழனிவேலுத்தேவர் அவர்கள்**





**திருப்பேரூர் - அருள்மிகு. சாந்தலிங்க சுவாமிகள்**
**குருபூசை விழாவின்போது**
வெளியிடப்பெற்றது.
1971



நூல் பதிப்பாளர் :
பழனி - கட்டைச்சின்ஞம்பட்டி
நிலக்கிழார்
திரு. அ. பழனிவேலுத்தேவர் அவர்கள்.

திருவாமாத்தூர்க் கௌமார சபை வெளியீடு 112.

உ
குருவே துணை

# சத்திய சூத்திரம், சத்திய வாசகம்

ஆசிரியர் :
மகான். வண்ணச்சரபம்
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்
என வழங்கும்
**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**
திருவாமாத்தூர்.

பேரூர் - தவத்திரு. சாந்தலிங்க சுவாமிகள் குருபூசையும்
சத்வித்யா சன்மார்க்கசங்க 55-ஆம் ஆண்டு விழாவும்
10—3—71-ல் நிகழ்ந்தபோது
சிரவணபுரம் கௌமார மடாலயத்தலைவர்
**தவத்திரு. சுந்தர சுவாமிகள் அவர்களால்**
வெளியிடப்பெற்றது.



பதிப்பாளர் :
பழனி – கட்டைச் சின்னம்பட்டி
நிலக்கிழார்
**திரு. அ. பழனிவேலுத்தேவர் அவர்கள்**
1971

# முன்னுரை

வெண்பா

தண்டபா ணிக்குரவன் தந்தஇரு சத்தியநூல்
கொண்ட கருத்தின் குறிப்பறிவோர்—சண்டன்மதன்
வேதா எனும்பகையால் வெந்துயர்எய் தாதுபர
நாதாந்தம் எய்துதல்திண் ணம்.

நூல்: சத்திய சூத்திரம், சத்திய வாசகம் என்னும் பெயரினை உடையதாய் மக்கள் அறிந்துய்பவேண்டிய உண்மையைக் கூறும் சூத்திரம், வாசகம் என்ற பெயருடன் விளங்குவதாகும்.

ஆசிரியர்: இவ்விரு நூல்களையும் அரிய மானிடப்பிறவி பெற்றுள்ள மக்கள் உண்மையை யறிவுற்று முத்திபடையுமாறு தமது அருளநுபூதி விளக்கத்தால் தெளிந்து கருணை மிகுந்து அருளிச்செய்தவர் மகான் - வண்ணச் சரபம் அருள்மிகு. தண்டபாணி சுவாமிகளாவர். இவருக்குத் திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என்ற வேறு பெயர்களும் உள. செந்தமிழ் நாட்டுத் திருநெல்வேலியில் 1839-ல் சைவ வேளாளர் மரபில் தோன்றினார்.

இளமையிலேயே வேல் வழிபாடு, ஆறெழுத்து செபித்தல் இவைகளை மேற்கொண்டார். இதன் பயனாக எட்டரை வயது முதல் புதிய பல தமிழ்க் கவிகள் இயற்றும் ஆற்றல் பெற்றார். சாத்திரம், தோத்திரம், சரித்திரம், இலக்கணம், நாடகம், இசை, நீதி முதலிய வகையில் பல பாடல்கள் அருளினார். இவ்வாறு பாடப்பெற்ற சுமார் இலட்சம் பாடல்களையும் தாமே பனையோலைச் சுவடியில் எழுதியும் வைத்தார். இவரால் எழுதப்பெற்ற நூற் களஞ்சியத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற தொகுப்பே இந்நூலாகும் என்க. பலதல வழிபாட்டை மேற்கொண்ட இவர் செல்லுமிடமெங்கணும் சீவ கருணை நெறியை வளர்த்தார். வடலூர் வள்ளற்பெருமான் அன்புத் தொடர் புடன் திகழ்ந்தார். அருளாடல்கள் பல செய்தருளினார். இறுதியில் விழுப்புரத்தையடுத்த திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் தங்கித் தவம்புரிந்து 1898-ல் ஞானசமாதி கொண்டார்.

நூற்சிறப்பு: சத்தியநூல் சொல்வோர், சத்தியமுடையவராயன்றோ இருக்கவேண்டும். இவர் எத்தகையினர் எனில் சத்திய பத்தி முதிர்ந்த வைராக்கியத்தால் பொதிகை மலையின் சார்பான திருமலை என்னும் மலையின் மீதேறி, முருகனைக் கண்முன் காணவேண்டிப் பல பாடல்கள் பாடினர். நின் தரிசனம் காணப்பெறேனாயின் உருண்டு உயிர் விடுவேன் என்று உறுதியுடன் வேண்டினார். அவ்வாறு காட்சி எய்தாமை காரணமாக அம்மலை முகட்டிலிருந்து கீழ்நோக்கி உருண்டனர். கொண்ட கொள்கைப்படியும், சத்திய நெறிப்படியும் உருண்டார். திருவருள் உடலில் ஊனமில்லாதபடி காக்கப்பெற்று நலமுடனிருந்தனர். இதனைத் தன் வரலாறும் அனுபவமும் விளங்கப் பாடிய குருபரதத்துவம் என்ற நூலில்,

வடதிசையில் தலைவைத்து மறலிதிசை கால்காட்டி
உடலையங்க திருமலையின் உச்சியினின் றுருட்டி விட்டேன்
விடலையிடும் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனக் கொண்டங்கோர் மண்தரையில் விட்டதுவே—என்றும்,

"பல்லிலொன்றும் எலும்பிலொன்றும் பழுதுபட்டுப்
போகாமற் பாது காத்த
நல்லியற்சண் முகப்பெருமான்"—என்றும் கூறுகிறார். இவ்வாறு பல நிகழ்ச்சிகளைக் குருபரதத்துவ நூலில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார்களென்றால் சத்திய நெறியை இவர் கைக்கொண்டதற்கு வேறு சான்றுகள் வேண்டுமோ.

இவர் அருளிய நூல்கள் எல்லாமே பாடல் வடிவினதே என்றாலும் இந் நூலின் பிற்பகுதியிலுள்ள சத்தியவாசகம் என்ற பகுதிமட்டும் சுவாமிகள் அருளிய உரைநடை நூலாகும். இதுபோன்ற வேறு உரைநடை நூல்கள் இவராற் செய்யப்பெற இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**உரைவிளக்கம் :** சத்திய சூத்திரம் என்ற 120 சூத்திரங்கட்கு விளக்க உரை எழுதியவர் ஷை நூலாசிரியர் பெயரரும், திருவாமாத்தூர் கௌமார மடாலயம், பழனி தண்டபாணி சுவாமிகள் மடம் இவற்றின் தலைவரும், அடியேன் தந்தையாருமாகிய தவத்திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்களாவர். சுவாமிகள் நூலில் மிகுந்த ஈடுபாடும், பயிற்சியும் உடைய இவர்களை இந்நூற்கு விளக்கம் எழுதித்தர வேண்டினேன். எழுதித் தந்தார்கள். அழகுற எழுதப்பெற்றுள்ள உரை கற்பார் மனத்திற்குக் களிபேறுவகை தரவல்லதாகும். பல நூல்களின் ஆசிரியராக விளங்கும் திரு. ஐயா அவர்கள் நூலாசிரியர் கருத்தை நன்கு விளக்கியிருப்பது காணலாம்.

**பதிப்பாளர் ;** இவ்வழகு நூலை வெளியிட்டு "யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற நன்னோக்குடன் தம் புண்ணியப் பொருள் கொண்டு பதித்து வழங்குபவர் பழனியை அடுத்துள்ள கட்டைச்சின்னாம்பட்டி நிலக்கிழாரும், பேரன்பரும், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் நூற் கருத்துகளைப் படித்து மகிழ்பவருமான திரு. அ. பழனிவேலுத் தேவர் அவர்களாவர். அவர்கள் தொண்டு வளமான தொண்டாகும். அவருக்கும் அவர் குடும்பத்தினருக்கும் இறையருள் உண்டாவதாக.

**வெளியீடு :** இந்நூல், கோவையையடுத்துள்ள பேரூரில் தவத்திரு. சாந்தலிங்க சுவாமிகள் குருபூசை விழா 10—3—71 மாசிமக நாளன்று நடைபெற்றபோது வெளியிடப்பெறுவது பல்லாற்றானும் பொருத்தமே. சிரவண புரம், கௌமார மடாலயத் தலைவர் தவத்திரு. சுந்தரசுவாமிகள் அவர்களால் ஷை விழாவில் வெளியிட அனுமதித்த ஷை பேரூர் மடத்தின் தலைவரான தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகள் அவர்கட்கும், நூலின் அரிய கருத்துகளைப் படித்துணரும் அன்பர்கட்கும், நூலைப் பதித்து வழங்கிய திரு. அ. பழனிவேலுத் தேவர் அவர்கட்கும், உரை எழுதி வழங்கிய தவத்திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்கட்கும் மிக்க நன்றி உரியதாகுக.

கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர் P. O.,
விழுப்புரம் வட்டம்,
10—3—71.

அன்பன்,
**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்.

# பதிப்புப்பாயிரம்

---

## கட்டளைக்கலித்துறை

சத்திய சூத்திரம் சத்திய வாசகம் தன்னடியார்
பத்தி கொளுந்தண்ட பாணிக்குரவன் பகர்ந்தவற்றைப்
புத்தி பெறும் கட்டைச் சின்னும்பட் டிக்கண் பொருந்துநல்லோன்
நத்திப் பழனிவே லுத்தேவர் அச்சிட்டு நல்கினரே.

## வெண்பா

பற்று புகழ்த்தண்ட பாணி முனிவனன்பாற்
சொற்றுளஇந் நூலிரண்டைத் தோயுமின்பம்—பெற்றுப்
பழனிவே லுத்தேவர் பண்பொடச்சிட் டீந்தார்
பழகுமுன்னூ றாலமைந்த பாங்கு.

சத்திய சூத்திரத்திற் சாரும் கருத்ததனை
ஒத்திசையு நற்பொருளை ஓர்ந்தெழுதிப்—பத்தர்
எளிதி லுணர இதனிலிணைத் துள்ளேன்
களிபெருகு வாரன்பர் கள்.

பேரூரிற் சாந்தலிங்கப் பெம்மான் குருபூசைச்
சீரூர மாசிமகஞ் சேர்நாளில்— நாரூரச்
சுந்தரநா மங்குலவுந் தூயோன் வெளியிடுதல்
சுந்தரமா வாய்த்த தொடர்பு.

நாடுபுகழ் சாந்தலிங்க ராமசா மிப்புனிதன்
கூடுமுயர் சுந்தரப்பேர் கொண்டநல்லோன்—பீடுறச்செய்
தண்டபா ணிக்குரவன் சத்திய சாத்திரநூல்
கொண்டவெளி யீடினிதா கும்.

## குறள் வெண்பா

மெய்த்தவஞ்சே ரும்பழனி வேலுத்தே வப்புனிதன்
இத்தரையில் வாழ்க இனிது.

தங்கல் :
தண்டபாணி சுவாமி மடம்,
அடிவாரம்,
பழனி,
5—3—1971.

நூலாசிரியர் பெயரர் :
தி. செ. முருகதாச ஐயா,
கௌமாரமடத்தலைவர்,
திருவாமாத்தூர் P. O.
விழுப்புரம் வட்டம்.



நூலாசிரியர் :

வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

உ
குருவே துணை

# சத்திய சூத்திரம்

காப்பு - வெண்பா

பத்திசித்தி முத்திப் பயனடைவார்க்(கு) ஆகரவாம்
சத்திய சூத்திரநூல் சாற்றுவதற்(கு)—எத்திசையில்
வாழும் எவரும் மறக்கரிய மெய்ப்பொருளாய்ச்
சூழும் குருவே துணை.

## நூல்

### முதலாவது
## தெய்வத்தன்மை

தெய்வம்ஒன்று உளதெனத் தேறிப் பணிவது
மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே.

தெய்வம் இல்லையென்று கூறுமவரைப் பிரித்து ஒதுக்கி, உண்டு என்று வணங்குவோர்கள், தெய்வம் பல என்று மயங்காமல் ஒன்றே என்று தெளிவுற்றும், ஒன்றையே வணங்குவதும், மனிதப் பிறப்பைப் பெற்றவர்கள் கடமையாகும். "ஒன்றென்றிரு, தெய்வம் உண்டென்றிரு" என்ற முன்னோர் வாக்கினை உன்னுக. 1

தெய்வம்இன்(று) என்பவர் தீய விருகமே.

தெய்வம் இல்லையென்போரை, பொதுவாக மிருகம் என்னாமல் "தீய" என்று கூறுவது என்னை எனில்? மிருகம் எதுவும் கடவுள் இல்லையென்று கூறி, நல்லோர் மனதைப் புண்படுத்தவில்லை, தன்னளவில் இரை தேடி உண்டு வாழ்வதால் அவை நல்ல மிருகம் எனவும் கொள்ளுமாறு குறிப்பாற் கூறியதறிக. 2

பத்தர்தம் எண்ணப் படிவிளங் குவதே
நித்தமாம் தெய்வ நிலையெனல் முறையே.

தெய்வம் தனக்கென, ஒரு வடிவமோ, பெயரோ, உள்ளதல்ல. தன்னை அன்புடன் வழிபட்டுத் தியானிப்போர் எண்ணப்படி நின்று அருள்வதாகும். "ஒரு நாமம், ஒருருவம், ஒன்றும் இல்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி." என்பது மணிவாசகம். பல வடிவமாக அமைத்திருப்பது, அன்பரது

மனநிலைக்கேற்பக்கொண்டு, வழிபட்டு உய்வதற்காகும். பொன் ஒன்றே பல அணிகலனுகவும், மண் ஒன்றே பல பாண்டமாகவும், பெறுவோர் பொருட்டு உள்ளதுபோல் என்க. 3

அவன் அவள் அதுவாய் அளவில்பற் பலவாம்
சமயங்கள் தோறும் சார்வ(து)ஓர் தேவே.

அவன், அவள், அது, என்றவாறு, பல சமயக் கடவுளாயும் தெய்வம் ஒன்றே. பல வடிவாயும் நின்று அருள்வதாகும். 4

தன்னருள் பெற்றூர் தமைப்;பெருர் தம்தே(வு)
என்ன விளக்கும் இயற்கைதே வினதே.

தெய்வமானது, தன் அருள்பெற்ற ஒருவனை, அருள்பெருத பலரை அவர்கள் வழிப்டும் தெய்வமாக விளங்கச்செய்யும் இயல்பையுடையது. (நால்வர், ஆழ்வாராதிபர்போலெனக் கொள்க.) 5

பெரிதருள் பெற்ருர்ப் பேணு(து) இகலிச்
சிறிதுபெற் றுள்ளார் சிதைவுறு தீங்கும்
கண்டுகண் டுறுதல் கடவுட் டன்மையே.

தெய்வத்தின் பெரிய திருவருளைப்பெற்றவர்களை, அன்புடன் வழிபடாமல், பகைத்து, கொஞ்சம்பெற்ற சிலர், அதன் பயனைச் சிறுமையடைகின்ற தீமையை, கண்டுகொண்டிருப்பது கடவுள் இயல்பாகும். திருஞான சம்பந்தர் ஆதியரை, சமணராதியோர் பகைத்துச் சிறுமையுற்றனர் என்பதை உன்னுக. 6

நன்ருெடு தீதின் நடுநிலைப் பொருளாம்
தெய்வத் தன்மை செப்பரும் தகைத்தே.

தெய்வமானது, நன்மைக்கும், தீமைக்கும் பொதுவாகி, நடுநின்று செயல்புரியும். அதை அளவிட்டுக் கூற முடியாதென்க. "நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே" என்பர் வடலூரடிகள். "ஆட்பாலவருக்கருள் வண்ணமும் ஆதிமாண்பும், கேட்பான் புகில் அளவில்லை கிளக்கவேண்டா" என்பர் திருஞானசம்பந்த நாயனர். நம்சிற்றறிவுக்கு மேற்பட்ட அருளியல்பாகும் 7

இஃதே தெய்வத்(து) இயற்கையென் றியம்பி
இகழப் பட்டார் எண்ணரும் பலரே.

தெய்வம், இப்படிப்பட்டது என்று (உருவம் என்றும் அருவம் என்றும் உண்டு என்றும் இல்லையென்றும்) மாறுபட்டுப் பேசி, வாதத்தில் ஒருவருக்கொருவர் தோற்று இகழப்பட்டவர் பலராவர். 8

எப்பொருட் குறிக்கும் யாவர் வணக்கமும்
தெய்வத் தின,எனத் தெளிகுவ(து) அரிதே.

பல தெய்வம் உண்டென்று வணங்கினாலும், அவ்வணக்கம் யாவும், உண்மையான தெய்வம் ஒன்றையே சாரும். மக்கள் வாழ்விற்குப் பயனாகப் பலவகையான நாணயங்களிருப்பினும், அவற்றின் மதிப்பு. பயன் அரசாங்கத்துக்கு உரியதுபோலென்க. 9

செய்வம்என் மெய்ப்பொருள் செயும்தொழில் பலவற்(று)
ஓர் உயிர் அதனையொத்து ஒளிரச் செய்தலில்
நன்றும், அதுபோல் நாய்உண(வு) அருந்தித்
தேக்குநர் கொடுங்கோற் செருக்குக் காட்டலில்
தீதும் இன்றெனச் செப்பிடல் துணிவே.

உண்மைப்பொருளான தெய்வம் ஒன்று. அது செய்யும் செயல்கள் பல. அவற்றுள், சாதாரணமாக ஒரு உயிரை எல்லா வல்லமையும் உள்ள தன்னைப்போல, மக்கள் போற்றும்படி செய்வதுபோல நன்மையும், அதுபோன்று, நாய் உண்ணற்கான ஊன் உண்டு இறுமாப்புடன் உயர் பதவி (அரசாட்சியில்) நின்று மக்கட்குத் துன்பம் வரும்படி கொடுங்கோல் ஆட்சி செய்யும்படி விட்டிருப்பதுபோலக் கெடுதலும் இல்லை என்று துணிந்து கூறலாம்.
ஆக சூத்திரம் 10



## இரண்டாவது

## குருத்துவம்

சகளம் முழுதும் அத்தன்மை வாய்தரப்
பெற்ற தவனும் பெருங்குரு ஆமே.

தெய்வத்தின் வடிவமாயுள்ள எல்லாமும் ஆகி, அதனதன் வல்லமையை வாய்க்கப்பெற்றுள்ள, சொரூப சித்தியமைந்த தவமுடையவனே பெரிய குருத்துவமுடையவனாகும். 1

வெட்(டு)அறா உடல்கொளும் மேதகு குரவன்
தெய்வத்(து) அயலெனச் செப்பலொண் ணாதே.

பார்வையளவில் உருவமாகவும், கத்தியால் வீசினால் உடலில் காயம் படாமல் வெளியில் வீசுவதுபோல் இருப்பதான சிறந்த சொரூபசித்தனான குருநாதனாவான், தெய்வத்துக்கு வேறுயுள்ளவனல்ல என்பதாம்.

அல்லமாப்பிரபு, அத்தகையோர் மாயை என்பாள் கைக்குப் பிடிபடாததும், மத்தளத்தை அடித்து ஓசையெழுப்பியதும் சூனிய சிங்காதனத்திருந்ததும்போலவுள்ளது சொரூப சித்தி. 2

எச்சமயங்களும் என்னஎன்று ஏற்றே
குற்றம் களையும் குருத்துவம் வலிதே.

உயர்ந்தனவும், தாழ்ந்தனவுமான சமயங்களெல்லாம் தனதாக ஏற்று, அதாவது அந்தந்த சமயக்கடவுளாக விளங்கியும், தாழ்ந்த சமயங்களில் அமைந்த தவருன கருத்தை மாற்றியும் நல்லன அமைக்கத்தக்க குருத்துவப் பண்பு சிறப்புடையதாகும். 3

குருஎன நிகழ்வான் கொன்றுான் அருந்தாக்
கருணையைப் பெருக்கும் கடமை யோனே.

குருவென்றுவரும் யாவராயினும், ஒரு உயிரைக்கொன்றும், அதன் ஊனை உண்டும் வாழும் தீய நிலையை மாற்றி, மக்களை நல்வழிப்படுத்தும் கருணையைக் கடமையாக உடையவராதல்வேண்டும். 4

எத்திறற் குருவும் இரக்கம் இலானேல்
சத்தியம் சத்தியம் தகுவனும் அவனே.

உயிர்களின்மீது இரக்கமென்ற ஒன்று இல்லாவிட்டால், குருவாக வரும் ஒருவன், எவ்வகைப்பட்ட மேன்மையுடையவனானாலும் அவன் அசுரனாகவே மதிக்கப்படுவான்.

"இரக்கமிலா மாந்தர்க்கு இயல் உணர்ந்தார் கூடி
அரக்கரெனப் பேரிட் டனர்" மநுநெறித் திருநூல்.

"மருஆணைப் பெண்ணாக்கி" என்ற பாடலில், ஓர் உயிரைக் கடிந்து உண்ணும் கருத்தனேல்எம், குருஆணை எமது சிவக்கொழுந்தாணை ஞானி யெனக்கூறெண்ணாதே" என்பர் வடலூரடிகள். அதன் திடம் விளங்க "சத்தியம் சத்தியம்" என்றார். 5

தன்தவ வலியாற் சார்ந்தமா ணாக்கர்க்(கு)
இன்பம் தருகுரு எவனோ ஒருவனே.

தன் தவத்தின் பயனாகத் தான் மட்டும் இன்பப்படுவதைவிட்டு, தன்னைச் சார்ந்தவர்கட்கும், இன்ப வாழ்வைத் தரக்கூடியவனாக தெய்வத்திருவருள் வல்லமைபெற்ற குரு, யாரோ ஒரு சிலரே இருக்கமுடியும்.

திருக்கலியாணங்காண வந்த பலருக்கும், அரிய பேரின்ப வீடுபேற்றை உதவிய திருஞானசம்பந்த நாயனாரை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம் இத்தகையார் மிக அரிது என்பதை 'எவனோஒருவனே' என்றார். 6

பக்குவத் தளவிற் பகர்தரு குரவன்
மிக்குஉயர்ந் தோன்என விளம்பும்மூ துலகே.

குருவாக இருப்பவன், தன்னிடம் வந்த மக்களின் தரத்துக்கு (கல்வி, ஒழுக்கம், தவம், பண்புகட்கு) ஏற்ற நெறிமுறைகளைப் படிப்படியாகக்கூறி

வழிப்படுத்தவேண்டும். இளம்பள்ளி மாணவர்கட்கு, மேல் வகுப்புப் பாடத்தைக்கூறி மலையவைத்தல் கூடாததுபோல, எடுத்தவுடனே உயரிய தத்துவத்தைக் கூறுதல் கூடாது. மாணவனது மன நிலைமைக்கிசைய உபதேசிப்பவன் உயர்ந்த குருவாவான் என்பதாம். 7

கன்னியைத் துயர்செய் காமுகர் என்னத்
தன்னிலை சிறியார் தமக்குரைத் துரைத்துப்
புண்செயும் குரவர் பூமியிற் பலரே.

மேலே கூறியதற்கு எடுத்துக்காட்டாக இச்சூத்திரமுள்ளது. இளம் பருவப்பெண் ஒருத்தியுடன் எவ்வன ஆடவன் பழக முற்படுவதுபோல தன்னைவிட ஆரம்பநிலை மாணவனிடம் மேலான அநுபவத்தைக் கூறி, அவன் அதை அறியாமல் மயங்கக்கூறித் துன்பப்படுத்தி தானும் வருந்துவதுபோல குருவாவார் பலர் உலகில் உண்டு. 8

வல்லான் குருஎனில் மாட்டா தாரையும்
நல்லாற்(று) ஒழுக நடாத்தும் அன்றே.

குருவாக இருப்பவன், தகுதியில் மேம்பட்டவனுயிருந்தால் தரத்திற் குறைந்தவரையும் நல்வழியிற் ருெடரும்படி விரைவில் குணப்படுத்துவான். 9

சமயக் குரவரில் தாழ்தகை யினரும்
கூலிகொள் குரவரில் கூர்ப்பினர் தாமும்
இருப்பா ரேயென்(று) இயம்பிடத் தகுமே.

ஒரு சமயத்துக்கு முதன்மையான குருவாகவருபவருள்ளும் குறைவான தகுதியுடையாருண்டு. அதுபோல சம்பளமாக (உபதேசிப்பதற்குரிய) ஊதியமாக சீடரிடம் பொருள்பெறும் குருவாயுள்ளவருள், உயர்ந்த பண்புடையவரும் உண்டு என்பது முறையாகும். 10

ஆக சூத்திரம் 20.

---

## மூன்ருவது
## தவநிலை

தன்தொழி லாவது தவம்ஒன் றேயென
வள்ளுவன் ஆதியர் வற்புறுத் தினரே.

உடல் வாழ்க்கைக்காக மேற்கொள்ளுந் தொழில் பலவுண்டு. அத்தொழில் யாவும் உடலை ஓம்புமளவிலே பயன் தருவதாய் மறையும். ஆனல் தன் உயிர், மேல்நிலை படைதற்காகச் செய்யும் தொழில், தவம் ஒன்றேயாகும்.

அந்தத் தவம் எத்தகையது என்பதையும், தவம் செய்வதே தன் தொழில் என்பதையும், திருவள்ளுவரும் ஔவையார் முதலியோரும் கூறினர்.

" தவம் செய்வார் தம்கருமம் செய்வார், மற்றல்லார்
அவம் செய்வார் ஆசையுட் பட்டு " என்றும்

உற்றநோய் நோன்றல் உயிர்க்(கு) உறுகண்செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு. என்றும் கூறினர் திருவள்ளுவர்.

தவமாவது, பொறிவாயில் ஐந்தவித்து, என்றபடி மனதைப் புலன்வழி செல்லவொட்டாமல் தடுத்து, கடவுள் வழிபாடு, நூலாய்வு, உயிர் ஓம்பல், முதலிய நல்வழியில் நிற்பதாகும். விவரம் பிறவிடத்தறிக. 1

சிவன்திரு மால்முதல் தேவர் பலரையும்
தவர்எனக் கூறும் தருமம்ஒன் றுளதே.

சிவசாரூபம்பெற்ற உருத்திரர்களையும், திருமால் அமிசமான அவதாரங்களையும், உபாசனையின் பயனாகப்பெறும் சாரூபப் பதவிபெற்றவர்களாவர் என்று கூறுவது முறையான ஒன்றாகும்.

எந்தத் தெய்வத்தையானாலும் உபாசனை புரிபவர், அதன் பயனாக அந்தந்த மூர்த்தி வடிவம் பெறுவர். அவர் அந்தந்தக் கடவுளாகவே மதிக்கப்படுவர். நெருப்பிற் காய்ந்த இரும்பு நெருப்பாகவேயிருந்து செயல்புரிதல்போல், அவரும் செயல்புரிவர் என்பதாம். புழு ஒன்றைக் குளவி, தன்னைப்போல் உருவம், தன்மைபெறச்செய்தல் போலாம்.

" ஐயமின்றித் தெய்வஉருத் தியானிக் கின்றோர்
அதன்வடிவம் ஆவாரென் றறையும் நூல்கள்
பொய்யல என்று ஒவ்வாதார் தாமும் காணப்
புழுஎடுக்கும் வேட்டுவனும் புரியும் சாட்சி" என்பதாலறிக. 2

குருவாச் செய்தலும் கொற்றவன் ஆக்கலும்
முற்றவ பலமென மொழியத் தகுமே.

ஒரு மதத்தின் குருவாக ஒருவன் அமைவதும் ஒரு நாட்டின் அரசனாக ஒருவன் வருவதும், அவரவர் செய்த முற்பிறவியின் தவப்பயன் ஆகும்.

கருணை தோய்தலும் காமம் கடிதலும்
தவத்தின(து) உறுப்பெனச் சாற்றிடல் முறையே.

மேலே கூறிய தவத்துக்கு உரிய அங்கமாக கருணை, காமம் கடிதல், இரண்டையும் கூறினர். முன் முதற் சூத்திரத்தின் உரையிற் கூறியபடி உற்றநோய் நோன்றல், 'காமம் கடிதலும்' "உயிர்க்கு உறுகண் செய்யாமை" கருணை தோய்தலும் எனக்கொள்க 4

காமந் தன்னிலும் கடும்பகை கொலையுலை
ஆம்தவத் தினுக்கென்(று) அறிகுநர் சிலரே.

தவத்தின் உறுப்பு கருணையும் காமம் கடிதலும், என்பதை மேலும் உறுதிப்படுத்தி, காமத்தைவிட மிகவும் தவத்துக்குக் கொடிய பகையாவது உயிர்க்

கொலையும், அதனால்வரும் புலால் உணவும் என்று அறிபவர் சிலர் என்றார்.

காமம் தன் தவம் ஒன்றுக்கே கேடு செய்வது. கொலையும் புலையும் மற்றை உயிருக்குக் கேடு தருவதாய், அருவருப்பான புலால் உணவுக்கும் காரணமாயிருப்பதால், 'கடும் பகைகொலைபுலை ஆம்' என்றும், இதை அறிகுநர் சிலர் என்றும் வெறுத்தோதினர். 5

செங்கோல் மன்னர்ச் சீர்பெறத் தாங்கலும்
கொடுங்கோல் அரையர்க் குலத்தொடு கடிதலும்
தவசிகள் கடன்எனச் சாற்றிடல் முறையே

தவசிகளாவோர், தன்னலமாகத் தவஞ்செய்து வீடுபேறு அடைவதை விட, உலகினைப் புரக்கும் மன்னர்களை நன்னெறியில் நடந்து மக்களை வாழ்விப்பதிலும் பங்கேற்கவேண்டும். செங்கோல் மன்னர்களை மேலும் சிறப்படையும்படி ஆதரித்து அறம் கூறவேண்டும். அல்லாத தீமையில் அரசியலை நடத்தும் மன்னர்களை அடியோடு மாற்ற வழி செய்யவேண்டும் எனக் கூறினர். இவை தவறுடையவர் கடமை என்பதை தசரதமன்னனவை யில் வசிட்டர் தலைமையாயிருந்ததைக்கொண்டு ஒப்பிடலாம். 6

உல(கு)உயத் தகும்நலம் ஒன்றும்எண் ணுமல்
தாம்உயக் கருதும் தவத்தினர் பலரும்
நாயனை யாரென நவிலத் தகுமே.

உலகப்பொதுநலம் செயக் கருதாமல் தான்மட்டும் நலம்பெற்று வாழும் எண்ணத்தை ஒரு தவம் செய்பவன் எண்ணுவானேயானால், அத்தகையோர் பலரும், இழிபிறப்புடைய நாயுடன் ஒப்பாவர் என மனம் நொந்து கூறினர். நாயானது, தனக்குக் கிடைத்தவுணவைத் தானே புசிக்க விரும்பும். ஆதலின் அவ்வாறு கூறினர்.

தவம் புரிவது அருமை. அதன்மூலம் இறைவன் திருவருளைப் பெறுவது அதனிலும் அருமை. தவம் புரிவோர் எதையும் செய்பவல்லவராவர். இறையருளும் குறைவதில்லை எனவே தாராள மனப்பான்மையுடன் தம்போன்ற உயிர்கட்கு வேண்டிய நலம் செய்பலாம். "சேரவாரும் செகத்தீரே" என்று தாயுமான அடிகளும், "வம்மின் உலகியலீர்" என்று வடலூரடிகளும் கூறியதறிக. 7

தன்னலம் தாழ்த்தித் தாரணி உய்யும்
நன்னலம் உயர்த்துநன் நரகுலத் தவனே
ஆயினும் அவனே அரிஎனத் தகுமே.

தான் தவப்பயனாக நலம்பெற்று வாழ்வதைவிட, தன்னலம் சிறிதும் கருதாமல் இல்லை, தன்னலத்தைக் கெடுத்துக்கொண்டாவது உலக நன்மையான நற்செயலையே உயர்வாக எண்ணி முயல்பவன்

சாதாரண மனிதனுக இருப்பினும் அத்தகையவனே திருமாலோடு ஒப்பக் கூறுவது தகும்.

ஏனெனில் திருமால் பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் இன்ப வாழ்வைவிட்டு, பாற்கடலை கடைந்து தேவர்கள் அமுதம்பெற, ஆமையாக மந்தர மலையைத் தாங்கினர். பூமியையும் நால் வேதங்களையும் கவர்ந்துசென்ற இரு அசுரர்களை வராகம், மீன்வடிவிற்சென்று, அவரைக்கொன்று பழையபடி நிலைநிறுத்தினர். உலக நன்மைக்கான பல நலமும் செய்துள்ளனர். எனவே திருமாலுடன் தன்னலத்தைப் பொருட்படுத்தாமல் துன்பப்பட்டாவது உலக நலம் செய்பவரை ஒப்பிட்டுக் கூறினர். 8

புவிஅழும் நாளில், பொன்றலும் பிறப்பும்
தவிர்கதி எய்தும் தவத்தோன் தனிலும்,
அதுமகிழ் வதுவேட்(டு) ஆனமட் டுழைத்துப்
பலர்நக இறந்தோன் பண்(பு)உயர் உண்மை
அருளுடைப் பரமே அறிதற் பாற்றே.

புவியில் வாழும் மக்கள் அவலநிலையில் துன்பப்படுவதையறிந்தும், அதைத் தவிர்க்கும் எண்ணமில்லாமல், தான்மட்டும் இறப்பும் பிறப்பும் அற்ற உயர்முத்தியை எய்தும் ஒரு தவசியைவிட, அந்தப் புவிமக்கள் நலமடைவதொன்றையே கருதியும், கூடியமட்டும் முயன்றும் அதற்கான பலன் கிடையாமல், பலர்கூடி நகைக்கும்படி அவன் இறப்பானேயாளுல், அவன் பண்பின்சிறப்பை, மனத்தின் உயர்வை கருணைப் பரம்பொருள் ஒன்றே அறியுமன்றி என்போன்ருர் கூறி முடிப்பதல்ல என்ருர்.

புவி-என்பது புவியில் வாழும் உயிர்களை என்க. இதற்கு ஒரு எடுத்துக்காட்டு. ஒருவன் வேட்டைக்குச்சென்று நரிகள் பல கொன்று திரும்பினுன் வெற்றி முழக்கத்துடன். மற்ருெருவன், சிங்க வேட்டைக்குப்போய் வெற்றிபெற எண்ணினுன். இவரில் யார் பெருமைக்கு உரியவர்? கீழே உள்ள பாடலை உற்றுநோக்குக.

" நரிவேட்டை யாடிவந்து நாடறிய வாழ்ந்தோர்
அரிவேட்டைக்(கு) ஏகநத்தும் ஆவற்(கு)—உரியோரில்
தாழ்ந்தவரே என்ருேதுந் தாரணியோர் கூறுபுகழ்
வீழ்ந்து அருளை நாடினம் யாம் மெய்.
வீழ்ந்து–விரும்பி. அரி-சிங்கம். 9

இகபரம் வாழ்வித்(து) இறப்பொடு பிறப்பு இன்று
ஆயவீ டடைதல் அருந்தவப் பயனே.

இவ்வுலகமும், மேல் உலகமும் வாழ்வதற்கான நலம்செய்து, பின், சிறப்பும் பிறப்புமற்ற பேரின்பமான முத்திப்பேற்றையடைவது தவத்திஞலான பெரும்பயனுகும், 10

ஆக சூத்திரம் 30

—∞∞—

## நான்காவது

# வேதியர் தன்மை

தன் உயிர் போல்வன சருவான் மாக்களும்
என்னும்நீர் அந்தணர்க்(கு) இயற்கைய தாமே.

அந்தணராவோர்க்கு, இயல்பாயமைந்திருக்கவேண்டிய பண்பாவது, உலகத்துள்ள (யானைமுதல் எறும்புவரையுள்ள) எல்லா உயிரினங்களும் தன் உடம்பில் உள்ள உயிரோடு ஒப்பானவைகளே என்று உள்ளபடி அறியும் நற்குணமேயாம்.

அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுகலான் என்பது திருக்குறள். 1

இந்திரற் கட்டிலொடு ஈர்க்கும் வேதியர்
அவன்ஊர் நலம்விழைந்(து) அருந்தார் ஊனே.

ஜனமேஜெயர் என்பவர் ஒரு அந்தணத் தவசி. அவர் மகன் பரீட்சித்து. அவனை அரவு தீண்டியது. இறந்தான். இதையறிந்த முனிவர் அரவினத்தையே அழிக்க எண்ணி வேள்வி இயற்றினர். அதற்கான மந்திரம் ஓதிச் செய்த வேள்வித்தீயில் நாகங்கள் மந்திர ஈர்ப்பினால் வந்து வீழ்ந்து மடிந்தன. மகனைக்கடித்த நாகம் அட்டநாகத்தொன்று. எனவே அறிந்து தேவலோகத்தில் இந்திரனைத் தஞ்சமுற்றது. விவரமறியாத இந்திரன் அபயமளித்தான். முனிவர் யோகவலிமையாலறிந்தனர். அந்த நாகம் இந்திரன் கட்டிற்காலைச் சுற்றிக்கொண்டிருந்தது மந்திர ஈர்ப்புக்கு அஞ்சி, முனிவர் கட்டிலுடன் வரும்படி மந்திரம் ஓதினார். பாம்பு. இந்திரன் கட்டிலுடன் வந்தது. இந்திரன் முனிவரைத் தஞ்சமானான். பாம்புக்குத் தான் கொடுத்த வரத்தைக் காக்கவேண்டினன். அவனுக்காகப் பாம்பை மன்னித்தார் என்பது வரலாறு. இதனை இங்கு நினைவுபடுத்திக் கூறினர்.

எனவே இந்திரன் வாழிடமான சுவர்க்கலோகத்தில், மறுபிறவியிற் சென்று, அங்குள்ள சுகங்களை நுகரும் எண்ணத்தால், இவ்வுலகில் ஆட்டை வதைத்துக்கொன்று அதன் ஊனை அவியாகப்பெய்து, உண்ணும் கொடிய செயலை அந்தணர் செய்ய இசையார் என்பதாம்.

எனவே, தேவருலக அரசன் இந்திரன் அவனையே தனது மந்திரவலியால் இவ்வுலகில் வரவும், தன்னைத் தஞ்சமடையவும் செய்யவல்ல மந்திர வலிமையவர் அந்தணர். அத்தன்மையுடையவர். கருணைக்கு மாறானது வேள்வி என்று கூறினர், 2

சீரருள் விழைவோன் தெய்வப் பிராணன்,
அழற்றசை நுகர்வோன் அரசு வேதியன்
தம்மில் தாழ்ந்தார் தமக்கே பணிசெயக்
காதலிக் கின்றேன் கடைப்பார்ப் பானே.

அந்தணர்—அழகியதன்மை (கருணையான குளிர்ச்சி) உடையவர் என்றும் அறவோர் என்றும் தமிழ் மறை கூறுகிறது. அதைக் குறிக்கொண்டு, அப் பண்பு இலாத முறையில் உள்ள அந்தணரென்ற பிறப்புரிமையுடையாரை மூவகைப்படுத்தி இதிற் கூறினர்.

தெய்வத்திருவருளை விரும்பி, நியமந்தவறாமல் வாழ்பவன் தெய்வப் பிரா மணன் எனவும், வேள்வித்தீயில் ஊன்பெய்து எஞ்சியதை உண்பவன், அசுர வேதியன் எனவும், தம்மினும் ஒழுக்க முதலியவற்றால் கீழ்ப்பட்டு, பதவி முதலியவற்றால் உயர்ந்தவரிடம் தொழில்புரிந்து வாழ்பவன், கடைப் பார்ப்பான் எனவும், மூன்றியல்பினர்க்கும் மூன்று அடைமொழிமுன்னரிட்டு, பெயரும் மூன்று கூறினர்.

பிரமம் என்ற பரம்பொருளையறியும் ஞானமுடையவன் பிராமணன். பிரம ஞானமுடையவன் பிராமணன் என்பது வடமொழி. அப்படியின்றி கருணைக் குப் புறம்பாக பூர்வமீமாம்ச முறைப்படி கொலைவேள்விபுரிபவன், அசுரப் பண்புடையவனை அசுர வேதியன் என்றார். வாழ்க்கைக்குப் போதிய வசதி யின்றியோ, பதவி மோகத்தாலோ, பிறப்புரிமையால் தம்மினும் கீழ்ப்பட்ட (ஒழுக்கமுதலியவற்றால் தாழ்வுற்ற) வரிடம் தொழில்புரிய விரும்புதல், விரும் பத்தக்கதாயில்லையென்ற பரிவு காரணமாக கடைப்பார்ப்பான் என வருந்திக் கூறினர் இது கால இயல்புக்கு ஏற்றபடியமைந்த மாறுபாடு.

பழையன கழதலும் புதியன புகுதலும்
வழுஅல கால வகையினானே. என்பது முறையாயிற்று. 3

மனைமக வினரொடு வாழினும் பார்ப்பான்
தவர்பெருங் குழாத்திற் சார்ந்தவன் தானே.

பார்ப்பான் என்ற சொல், எப்போதும் பிரம்மமென்ற திருவருளையே பார்த்திருப்பவன் என்ற பொருளில் அமைந்த பெயர். அத்தன்மையில் உள்ள வன் குடும்ப வாழ்வில் இருப்பினும் அதில் பற்றின்றி வாழ்வானானால் அவன் பற்றற்ற தவசிகள் இனத்திற் சேர்ந்தவனாகவே எண்ணப்படுவான்.

அகத்தியர் முதலிய முனிவர்களும் மனைவிமாருடன் வாழ்ந்ததாகவே வரலாறுகளிருப்பதால், தவமுடையவர்களாகவே மதிக்கப்பெற்றனர். "தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்துடன் கூடி வாழ்வர்" அவர் ஞான முடையவரேயாம் என்க. 4

எவ்வகைத் தேவர்க்(கு) இடும்உண வாதியும்
உண்டனு பவித்தற்(கு) உரியர்வே தியரே.

அந்தணராவோர் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறுவிதச் செயலிற்கு உரியவராவர். அம்முறையில் உலக மக்களாவார், தென்புலத்தார், தெய்வம் என்ற வரிசையில் உதவும் கடமை களைப் பெற்று நுகர்தற்கு உரியவர் வேதியர் என்றார். அந்தணர் அன்றுடம் நற்செயலிலேயே ஈடுபட்டிருப்பதால் அவருண்டது அமரர்கள் உண்டதோடு ஒப்பாகும் என்பதாம். 5

ஆயிரம் தோள்இறை ஆதியர் பலரைஓர்
அந்தணச் சிறுவன் அணிதரு பரசால்
வென்ற உண்மை விளம்பும்இவ் வுலகம்
குயமகள் தன்னைக் கூடிஓர் பனவன்
பெறுமகன் தன்னால் பீதக நாடு
மதிக்கும்ஓர் பனவன் மாய்ந்ததும் சொலுமே.

பலிச்சக்கரவர்த்தியின் மூத்த புதல்வனை பாணாசூரன் ஆயிரம் கைகளையும், தலை ஐநூறுமுள்ளவன். இவனையும் கார்த்தவீரியார்ச்சுனதியர் பலரையும் கொன்றவன் அந்தண மகவான பரசுராமன் ஆகும். வீரமுடைய இவனைப் புகழும் உலகமானது. சாலிவாகனன் என்ற அரசன் குயமகளுடன் கூடி அந்தணன் பெற்ற மகன் இவன் விக்கிரமார்க்கனைக் கொன்று தன் பெயரால் ஆண்டு எண் (சாலிவாகன சகாப்தம் என்று) வழங்கும்படி புகழ் பெற்றான் எனவே அந்தண மகவாக நேரே பிறவாதிருந்து குயமகள் தொடர்பாயிருந்து பிறந்த மாண்பு கூறியதாம். 6

கந்த நாண்மலர்க் கடவுள்நூல் காக்கும்
அந்தணர் மாட்சி அறிவரும் பாற்றே.

மணமிக்கதும் உயர்ந்ததுமான தாமரை மலரில் வாழும் பிரமன் விதித்த வேதம் நான்கையும் முறைப்படி கற்று. அதன்படி நடந்து வேதங்களையும் தங்களையும் பேணும் அந்தணர் சிறப்பினை மற்றையோர் அறிய முடியாததாகும்.

வேதம், எழுதொண்ணாமல் கேட்டே பாடம் செய்யத்தக்கது. எனவே சுருதி எனப் பெயர்பெற்றது. அதைக் கற்பது அருமை. அதைக்கற்றதுடனமையாமல், அதிற் கூறப்பட்ட ஒழுக்கத்துடன் அவர்கள் வாழ்வது மிகவும் சிறப்பு ஆகும். காக்கும் அந்தணர் என்றது வேதங்களையும் தங்களையும் எனக்கொள்ளவேண்டும்.

மறப்பினும் ஓத்து கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கம் குன்றக் கெடும் என்பது திருக்குறள் எனவே இம்முறையில் உள்ள அந்தணர் மாட்சி அறிவரும்பாற்றே என்றார். 7

அந்தணர் நெறிச்சென் றல்ல(து)யாண்டு யாரும்
செந்தகை முத்திச் சீர்பெறல் அரிதே.

எங்குள்ள எவராயினும் மேலான வீடுபேற்றினைப்பெற விரும்புவாராயின் அவர் அழகிய குளிர்ச்சியான உயிரிரக்கம் ஒழுக்கம் முதலிய நற்பண்புகளை அடிப்படையாகப் பெற்றுள்ள அந்தணநெறியிற் சென்றாலல்லது முத்திப் பேற்றினைப் பெறல் அரிது ஆகும்.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பேறும் எழுதலாவது அறம்; அந்த அறம் கொல்லாமையான சீவகருணையென்பது தமிழ் மறை முதற்படியான கருணையில்லையேல் இறுதியான வீடுபெறலரிது. வீடுபேறு பெறற்கு ஞானமே இன்றியமையாதது. அதற்கும் அடிப் படை, சீவகருணைமேல் ஈசுரபத்தி. பாசவைராக்கியம். பிரமஞானம் என்றபடி நான்காகும். இதினும் முதலாவது சீவகருணையென்பது தெளிவு. இதுவே அந்தணர்நெறி என்பதாம்.

" அறவினை யாதெனிற் கொல்லாமை " கோறல்
பிறவினை. என்பதாம் பிறவினை அறவினைக்கு மாறுபட்டது.

கொலை என்ற ஒன்று எம்முறையிற் செய்யினும் கொடிது. "எல்லா இடத்தும் கொலை தீது" என்பதினுனும் அறியலாம். 8

சாதி ஒழுக்கம தவறினும் மற்ருேர்
வேதியர் நிந்தை விளம்பலொண் ணுதே.

வேதியர் என்ற அந்தண மரபினர், பிறப்புரிமையான அறுவகை நெறி யினையும் உடையவராவர். எக்காரணம்பற்றியோ அவற்றைக் கைவிட்டி ருப்பாராயின், அதுபற்றியே அவரை நிந்திப்பது. அந்நெறியுடைய பெரி யோரையன்றி புறம்பாயுள்ள மற்றையோர் அவரை நிந்திப்பது கூடாது என்று மற்ருேர்க்கு அறிவுறுத்தியவாறும். 9

வேதிய மகவா மேதினிப் பிறந்தும்
தீதியல் வார்போல் தீயர் இன்றே.

உயர்ந்த வேதிய மரபில் பிறந்திருந்தும்கூட அம்முறைக்கு ஏற்ப உயர் குண ஒழுக்கமின்றி, மாறுபட்ட தீயொழுக்கமாதியன உடையராளுல், அவர் களைப்போன்று தீயவர் என்று கூறுதற்கு யாரும் வேறில்லையென்று முடிந்த முடிபாகக் கூறினர் 10

ஆக சூத்திரம் 40

ஐந்தாவது

## அரசர் தன்மை

சரதமும் நீதியும் தன்மையும் சார்தரும்
அரசன்மா நிலத்தோர்க்(கு) அன்னையனை யானே.

மன்னனென்போன் உலகை நல்வழியிற் காப்பவனுவான். அதற்கு இன்றியமையாமல் வேண்டப்படுவது மூன்று பண்புகள். ஒன்று சரதமென்ற உண்மை. மற்றென்று நீதி. தனக்கென ஒருமுறை, பிறருக்கென ஒரு முறையின்றி, பொது நோக்குடன் ஆட்சிபுரிதல், மூன்ருவது எல்லோரிடத் தும் கருணை (இரக்கம்) இம்மூன்றும் உடையவன் அரசன். அவன் உலக மக்களாவார்க்குத் தாயை ஒப்பாவான். திருத்தொண்டர் புராணத்திற் கூறப் படும் மனுச்சோழனை இங்கு நினைவு கூரலாம்.

மாநிலத்தோர்க்கு என்ற உயர்திணைமட்டுமின்றி அஃறிணையாவுள்ள பசுவுக்கும் அதன் கன்றுக்கும் இரங்கினான். கருணைகாட்டினான். தன் மகனையும் தேர்க்காலில் இட்டு நீதி செலுத்தினான். எனவே எவ்வுயிர்கட்கும் அவனைப்போன்ற அரசர் தாய் ஒப்பாவார் என்க. 1

பொய்புலை கோரம் பொருள்நசை ஆதிய
எய்து(ம்)மன் உலகோர்க்(கு) எமன்அனை யானே.

மேலேகூறிய சூத்திரம் அரசன் தாய்ப்பண்பை உவமைமூலம் விளக்கியது. இச்சூத்திரம் அரசனது தீபண்புக்கு உவமைகூறி அறிவித்தது. பொய்மை, புலால் உணவு, இரக்கமற்ற தன்மை, பொருளாசை, முதலிய தீய தன்மைகளை உலகத்தைக் காக்கவேண்டிய தாய்ப் பண்புள்ள அரசன் கொண்டிருப்பானானால் அவன் மாறுபட்ட நமனை ஒப்பாவான் என்றார். எனவே அவனால் மக்கள் நலமடையமாட்டார்கள் இன்னலே பெறுவார்கள் என்பதாம் 2

எக்கணத்(து) இகல்வந்(து) இறுக்கும் கொல்எனும்
அச்சமும் வீரமும் அணைதரும் மன்னே
அர(சு)ஓர் பெருஞ்சுமை யாம்என் றறிவனே.

அரசனானவன் பெற்ற அரச பதவியினால் பெருஞ் சுகந்துய்த்து மகிழ்ந்து இறுமாப்படைவது கூடாது பதவிவெறி, பொருளாசை காரணமாக அயல் நாட்டரசன் படையெடுப்பு வருமோ என்ற அச்சம் உடையவனாயிருத்தல் வேண்டும். அந்த அச்சம் காரணமாக மனம் சோர்வுறுதலும் கூடாது. அப்படி போர் நேரில், அவனை முறியடித்து வெற்றிபெறற்கேற்ற ஆண்மையும் தெளிவும் உடையனாதல்வேண்டும். அப்படிப்பட்ட அரசன், அரச இன்பத்தினால் மகிழாமல் அதை ஒரு சுமையாகவே ஏற்றுக் கடமையில் கண்ணும் கருத்துமாயிருப்பான் என்பதாம். 3

தசரதன் மகனெனத் தாரணி யோருக்(கு)
அஞ்சும்மன் இகலால் அழியான் அன்றே.

முன் கூறிய அரச இலக்கணத்துக்கு எடுத்துக்காட்டாக இராமபிரானைக் கூறினர். அரசன் போருக்குமட்டுமல்ல உலக மக்களுக்கும் அஞ்சி நடக்க வேண்டும். தனக்காக மக்களன்று. மக்கட்காகத்தான் என்று உணர்ந்து ஆட்சிபுரியவேண்டும் என்று குடியாட்சிப் பண்பை அன்றே சுவாமிகள் கூறியுள்ளனர்.

இராமபிரான் அரசேற்கவந்த நாளில் கைகேயியின் சூழ்வினையால் முடியையிழந்து காட்டிற்கேக வேண்டியபோது. "அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது" இராமபிரான் திருமுகம்.

" உருளுடைச் சகடம்பூண்ட உடையவன் உய்த்த கார்ஏறு
அருளுடை ஒருவன்நீக்க அப்பிணி யவிழ்ப்பது ஒத்தான்"

என்ற கூற்று இராமபிரான் அரச பதவியை மகிழ்ச்சியுடன் ஏற்கவில்லை. சுமையாகவே எண்ணினான். அது இல்லை என்றபோது மனம் வருந்த

வில்லை மகிழ்ச்சியே பெற்றான். ஆகவே அரச பதவியைச் சுமையாக எண்ணவேண்டுமென்ற மேற்சூத்திரத்துக்கு இராமபிரானை இங்கு கூறினர்.

மேலும் யாரோஒரு கலை வெளுப்பவன் சொற்காக கருப்பமுற்ற சீதா பிராட்டியை வனத்துக்கனுப்பினன் என்றதால் நாட்டு மக்களின் கருத்துக்கும் பழிக்கும் அஞ்சிய தன்மை புலப்படுகின்றது காண்க. இத்தகைய அரசனை வேற்றுநாட்டு அரசு படையெடுப்பால் தோல்விபெறமாட்டான் என்றவாறு யிற்று. 4

கூழ்இல்பாழ்ஞ் செய்க்(கு) இறைகொள்ளும் கொடுங்கோல்
மன்னர்ச் செயும்நாள் மலரவன் கைகள்
எட்டும் காரிவந்(து) இறுக்கத் தகுமே.

விவசாயம் செய்யப்பெற்றுப் பயன்தரும் நிலங்கட்கே வரிபெறல் வேண்டும். தரிசாகவுள்ள வெறும் நிலங்கட்கு வரிபெறுதல் கூடாது இது நேர்மையான முறை. இவ்வாறின்றி, பயிரிடப்படாத வெற்றிடங்கட்கும் வரி பெறும் கொடுங்கோலாட்சி செய்யும் மன்னனை, உலகைப்புரக்கும் அரசனைப் படைத்த பிரமதேவன் கைகள் எட்டினையும் வயிரவக் கடவுள் முற்பட்டுத் துணிக்கவேண்டியது தகும் என்பதாம்.

நேர்மைக்கு மாறுபட்ட அரசன்மீதுள்ள சினம் அவனைப்படைத்த பிரமன்மீது சென்றது. மேலும் அவன் கைகளைத் துணிக்கவேண்டும் எனவும் கூறினர். காரணம் பிரமன்தான். வயிரவன்முன் பிரமன் ஐந்து முகத்தில் ஒன்றைக் களைந்தான். அதற்குரியவன் வயிரவனே இன்று இத்தகைய தீய அரசனைப் படைத்த அயன் கைகள் எட்டினையும் துணிக்கட்டும் என்றார். ஏன் அரசனைச் சினக்கவில்லை என்றால் அவனுக்கான ஆயுட்காலம், பதவியிருப்பு முதலியவற்றை அயனே அமைத்தான். அதன்படி அரசன் நடந்தான். அவ்வாறு பிழைபடப் படைத்த தவறு அயனையே சாரும் என்பதாம். இதனால் வரிபெறும் முறை கூறினாராயிற்று.

கூழ்-பயிர், இறை-வரி, செய்-நிலம், காரி-வயிரவன். 5

இகல்நமக்(கு) இன்றென்று இறுமாப் படையும்
மன்னர் போலும் மடமையோர் இன்றே.

மன்னன் மனதில் நமக்கு எதிரிட்டுப் போர்புரிபவரில்லை. இருபபினும் படைப்பலம் நமக்குண்டு என்று இறுமாப்படைதல் கூடாது. படைபலமோ தன் வீரமோ இருந்தால்மட்டும் வெற்றி கிட்டாது. அப்படி இறுமாப்பு அரசனிடமிருந்தால் அந்த அரசனைப்போல மூடர் வேறு எவருமிரார் என்பதாம். 6

ஆலயம் பசுக்கள் அந்தணர் புலவோர்
மாதர்கற்(பு) ஆதியில் மன்னன் நோக்கம்
பெரிதுவைத்(து) அளிக்கின் பீடுறும் அன்றே.

அரசன் சிறப்பாகக் கண்காணித்தும், பேணவேடியதும் சில. அவற்றுள் ஆக இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில் வழிபாடு முதலியவற்றிற்கவனம், பசுக்களின் பராமரிப்பு (பசு என்றால் எல்லா உயிர்களும் அடங்கும்) அந்தணர் ஒழுக்கம் தவறாமை, மாதர்களின் கற்புநெறி காத்தல், புலவர்களை ஆதரித்துப் பாராட்டல் போன்றவற்றில் அரசன் மிகவும் பொறுப்புடன் காக்கவேண்டும். இவை அரசுரிமைக்கு உயிர்நாடிபோல்வதாகும்.

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனில் என்பது திருக்குறள்

மக்கட்கு மிகத் தேவையான பால், பசுவினம் பெறவேண்டுமானால் உணவுக்குப் போதிய புல்வெளி தேவை. புல்வெளியின்றேல் பால்வளம் குறைவு காணும்.

வேதியரான அந்தணர்கள் வேதமோதல் முதலியவற்றிற் சிந்தனை செலுத்துதற்கு அவர்கட்குத் தேவையான உதவி வேண்டும். அரசனாலேயே அவர் காக்கப்பெறல்வேண்டும். இன்றேல், முன் அதிகாரமான வேதியர் தன்மை 3-ம் சூத்திரப்படி வாழ்க்கைக்காக வேலை தேடநேரும். எனவே அரசன் அவர்களைப் பராமரிக்கவேண்டும் என்றார் திருவள்ளுவர்.

மேலும் அரசநீதி தவறினால் பருவமழை கெடும். நீர்வளம் குறையும். அது குறையவே, விவசாயம் குறையும். அது குறையவே உணவுக்குரிய தானிய உற்பத்தி குறையும். மக்கள் வாழ்வு திண்டாடும். ஆதலின் அரசன் ஆட்சி நேர்மைபெறப்படும். வானம் சுருங்கில் தானம் சுருங்கும். "சிறப்பொடு பூசனை செல்லாது" என்றும் மறை பேசுகிறது. எனவேதான் ஆசிரியர் முதலில் "ஆலயம்" என்று கூறினர். 7

மழைவறந் திடலால் மாநிலம் தளர்நாள்
வாள்வலித் தடக்கை மன்னன் உண்ணும்
நல்லுண வனைத்தும் நாய்மலம் போன்மே

வானம் பெய்யாமல் வறண்டுள்ளபோது மழை பெறுவதற்கான முறைகளைக் கையாண்டு மழைபெய்ய முயலவேண்டும். மழை ஒன்றினாலே வேளாண்மை செழிக்கும். மக்கள் வளமான வாழ்வைப் பெறுவார்கள். அதனைச் சிந்தனை செய்யாமல் மக்கள் துயரைக் கருதாமல் அரசன் தன் சுகமொன்றையே கருதி, நல்லுணவு, ஆடம்பரவுடை, வேடிக்கை, விளையாடல் முதலியவற்றிற் கவனம் பெறுவானேயானால் அவன் உண்ட நல்லுணவும்கூட நாய்க்கட்டத்திற்கு ஒப்பாகும். அவ்வளவு இழிதன்மையுடையதென்பது பொருள். மக்களாவார் உண்டது, தான்உண்டது என்ற பரந்த எண்ணம் வேண்டும். ஏனென்றால் மக்களால் உழவுசெய்து மக்களாவார் செய்யும் வேளாண்மை மூலம் வரிபெற்று ஆட்சி நடக்கின்றது. அவர்களால் நாமும் உலகமும் வாழ்

கின்றதென்ற எண்ணம் இன்றி இனிய சுவையுணவையுண்டு அரசன் மகிழ்வானேயானால் அந்தவுணவை இனியவையென்று எவ்வாறு கூறுவது. எனவேதான் அவ்விதம் கடிந்து கூறினரென்க. 8

தெய்வந் தன்னொடும் சித்தரா தியரொடும்
பேசலும் மன்னன் பெறத்தகும் தகுமே.

மன்னன் நீதிநெறிப்படி அறவழியில் அரசுபுரிவானேயானால் கடவுளிடத்தும், சித்தர்கள் முதலியோரிடத்தும் நேரிற் கண்டு பேசும் வாய்ப்பு கிடைக்கும். பேசவும் தகும். மனுச்சோழன்பால் திருவாரூர்ப் பெருமானும் மற்றும் பல பெருமன்னர்களும் பேசியும், இறைவன் பேசக்கேட்டதும் பலவாற்றின்மூலம் காணலாம். 9

நன்முறை செய்யினும் நலிவுற வருத்தினும்
மன்முதல் தேவாம் மாநிலத் தோர்க்கே.

அரசன் தன் ஆட்சியை நன்முறையில் நடத்தி மகிழ்வித்தாலும், அல்லது தீயவழியில் நடத்தி மக்களை வருத்தினாலும் மக்களாவார்கட்கு அரசனே முதற்றெய்வமாவான். "அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்" ஆட்சியில் அடங்கி வாழ்பவர் மக்கள். மக்களை வாழ்விப்பது அரசர்கள் கடமை. எனவே அரசனானவன் தான் வாழ்வது ஆட்சிபுரிவது உலகத்துள்ள அனைத்துயிர்கட்கும் பொறுப்புள்ளவனாக-கடவுட்கு தப்பினவனாக ஒல்லாட்சி புரியவேண்டுமென்க. 10

சூத்திரம் 50

---

## ஆருவது

# வணிகர் தன்மை

செட்டெனும் சொற்பொருள் சிறிதே ஆயின்
முழுதுணர் புலமை முரு(கு) அறி யாளே
அவன் அது புனைதலின் ஆன்றதே ஆமே.

செட்டு—என்பது வாணிபம் என்பதாம். செட்டி என்றால், வாணிபம் (வியாபாரம்) ஒன்று பெற்று ஒன்று தருதல் எனப்படும். முருகப்பெருமானுக்குரிய பல பெயருள், செட்டி என்பதும் ஒன்று. அதாவது மதுரையில் வைசியன் மகனாக, ஊமையாய்த் தோன்றினார் என்பதால் செட்டியென்ற பெயருடையரானார்.

எனவே, செட்டி என்ற சொல் சிறுமையுடையதாயிருந்தால், எல்லாம் உணர்ந்த முழுப்புலவனான முருகப்பெருமான் அப்பெயரைக் கொண்டிருப்பாரா? ஆகவே அப்பெயர் உயர்வினதென்று வாணிகச்சிறப்புக் கூறினர். வாணிபம் செய்பவர் வணிகர் என்க. 1

பத்தி கொண்டு பழுதில்வீ(டு) ஈதலும்
செட்டெனில் மற்றது தீருமாறு இன்றே.

தெய்வம், தன் திருவருட்செல்வத்தை அன்பர்கட்கு இலவசமாகத் தருவதில்லை. அன்பரது பத்தி என்ற ஒன்றைத் தான் பெற்றுக்கொண்டு, அதற்கு ஈடாக, வீடு என்ற முத்தியைத் தருகிறது. எனவே கடவுள் செய்வதும் வியாபாரமான வாணிபமேயாம். ஆனால் மற்றைய எவர் அதை மறுக்க முடியும்? எனவே வாணிபம் உயர்வு. 2

வணிதர்தாம் உலோபம் வாய்ந்தோர் என்கை
தரணி முற்றும் தபனன்ஒத்(து) எறிப்பினும்
ஒவ்வொர்கால் அவர்க்கு உதிக்கும் உதாரம்
மகிதலம் முழு(து) ஆள் மன்னர்எய் தாரே.

வாணிகர் (செட்டிகள்) மிகவும் செட்டாக (லோபமுடையவர்களாக) இருப்பார்கள் என்பது, உலகமெல்லாம் சூரியன்போல விளங்கும். ஆனால் அப்படியேயல்ல. ஒவ்வொரு சமயம் அவர்கட்கு வருவதான உதார குணமானது, உலகமுற்றும் ஆட்சி புரிகின்ற அரசர்கட்கும் மேலாக வந்துவிடும். எனவே, உலோபமுடைய செட்டியார்களே உதாரிகளாகவும் ஆவார்கள் என்பதாம். 3

கொள்ளல் கொடுத்தலின் குணமும் காலமும்
பொருள்நலம் கேடும் போதத் தெளிதல்
வணிகர்தம் கடனென மாநிலம் சொலுமே.

வாணிபத்தின் முறையாவது, தாம் வாங்கப்படும் பொருளின் குணமும் குற்றமும். அதுபோல் கொடுத்தலின் குணமும், குறையும், எக்காலத்தில் வாங்குதல் வேண்டும், விற்றல்வேண்டும் என்ற காலநுட்பம் தெரிந்து, கொள்ளல் கொடுத்தல் வேண்டும் என்று உலகர் கூறுவர். 4

கலம்உகைப் பாரில் கள்வரும், காட்டில்

பைக்கூ றைப்பொருள் பலவிற் பாரிற்
சீரியர் தாமும் சிலர்இருப் பாரே.

வாணிப முறையில், கப்பல் வியாபாரம் செய்யும் பெரிய செல்வரில் கள்ளத்தனமுடையவரும், ஊரூர்தோறும் போய், சிறுசிறு பைகளில் உணவுப் பொருளோ அல்லது வேறு எப்பொருளோகொண்டு வியாபாரம் செய்பவரில் உண்மையானவரும் சிலர், ஒவ்வொன்றிலும் இருப்பார்கள். 5

வட்டியின் ஆசை மலிவுறும் வணிகன்
கொட்டிய பொருள்,கரிக் குவையாம் அன்றே.

வாணிபம் செய்வதில், சாமான்களைக்கொண்டு கொடுப்பது ஒருமுறை. மற்றொன்று, பொருளை வட்டிக்குக் கொடுத்து, தன் பொருளைப் பெருக்குவது

ஆகும். செல்வத்தை ஈட்டுதல் முறைபாயினும், நேர்மைபான வட்டியைவிட, அதிக வட்டிக்குப் பொருளைக் கொடுத்துச் சேர்க்கப்படும் பொருள். ஒரு காலத்தில் கரியாய் மாறவும் கூடும். எனவே நேர்மை வேண்டும். ஏதோ அவசர நிமித்தம் பெறுபவன் மனமும் நோதலுறும். இதனை ஔவையார் "தீவினைவிட்டு ஈட்டல் பொருள்" எனவும், திருவள்ளுவர் "அழக்கொண்ட தெல்லாம் அழப்போம்" எனவும் கூறுவது காண்க. 6

சற்குரு மொழிவழி தானியம் விற்றேன்
பொற்கல் ஒன்று, புணரியிற் போக்கியும்
தானு வந்து தாளடைந் ததுவே.

ஏலேலசிங்கஞ் செட்டியார் ஒரு வாணிகமுடையவர். பெரும் செல்வர். திருவள்ளுவர் சீடருமாவர். உலகிற் பஞ்சம் வந்தது. செட்டியாரிடம் நெற்குவையிருந்தது. சீடரிடம் நெல் மிகுதியை, மக்கள் பஞ்சம் தீரும்படி கொண்ட முறைக்கு (1 ரூபாய்க்கு 4 படி வாங்கியிருந்தால்) ஒரு படி கூட்டி 5 படியாக விற்றுவிடு என்றார். 4 படி வாங்கினால் 3 படி விற்பது வியாபார முறை. மாறாகக் கூட்டி விற்கும்படி குருவின் ஆணை. இதில் சீடரான செட்டியாருக்கு மனமாற்றமில்லை. அப்படியே விற்றார். பணம் பெருகியது. நெல்லும் பெருகியது. வியப்புறவில்லை. குருபரனிடம் கூறினர். பொற்பண மெல்லாம் பொன்னாக வாங்கி ஒரு பாறைக்கல்போல் செய். உன் பெயரை எழுது. யாரும் அறியாமல் கடலிற் போட்டுவா என்றார்.

செட்டியார் அப்படியே செய்தார். சிலகாலமாயிற்று. அவர் ஊன் உணவினர். அதை மாற்றி நல்லுணவினராயும், நல்லுணர்வினராயும் திருப்ப எண்ணினர் திருவள்ளுவர். நீ ஆண்டுக்கெல்லாம் வேண்டிய மச்சவுணவுக்குப் பல மச்சங்களாகக்கொள்ளாமல், ஒரே பெரிய மீனாக வாங்கு என்றார், அப்படியே வலைஞரிடம்கூறிப் பெற்றுக் கூறினர். முன் இட்ட பொற்கல் வயிற்றிலிருந்தது. ஆனால் ஒளியில்லை. பாசமேறிக் கருங்கல் ஒத்திருந்தது. அதை வீட்டுவாயிலிற் போட்டனர். சில நாளானதும் பாசம் அகன்று ஒளி விட்டது. இதையும் குருநாதனிடம் கூறினர். அவர் அறவழியில் ஈட்டிய பொருள் கடலில் இட்டாலும் திரும்பவும் இட்டவனையே சாரும் என்று கூறி இனி மச்சவுணவையும் விடு என்றனர்.

சீடரான செட்டியார் வாணிபம் செய்தார். அறவழியிற் செய்தார். குரு சொற்படி செய்தார். பொற்குவையும் நெற்குவையும் வளர்ந்தன. பொற்கல் தன்னையே சார்ந்தது. புலால் உணவும் விட்டுப் புனிதரானார் என்பதை எடுத்துக்காட்டாகக்கூறி, அறவழியீட்டும் வாணிகச் சிறப்புக் கூறினர் இதற்குச் சான்றாக.

அழக்கொண்டதெல்லாம் அழப்போம், இழப்பினும்
பிற்பயக்கும் நற்பாலவை. இது குறள்கூறும் நெறி.

கடலில் இட்டிழப்பினும் தன்னையே நாடிவரும் அறப்பொருள் என்பதாம். 7

ஈசன் அளித்த எழில்மாங் கனிஒன்று
இனிதருந் தினன்முதல் எண்ணில் பல்லோர்
வணிகர்தம் குலத்தின் மாண்படைந் தோரே.

காரைக்காலம்மையின் கணவன், தெய்விகமாக வந்த மாங்கனியை உண்ட மாண்புடையவன் இதுபோல பல வாணிகர் வியாபாரமு டையவராய் வாழ்ந்து அக்குலத்தின் சிறப்பை விளக்கினர்.

முற்றத்துறந்த முனிவரான திருவெண்காட்டடிகள் வைசிய குலத்தில் தோன்றியவரேயாம். மேலும் திருத்தொண்டர் புராணத்துவரும் அமர்நீதி நாயனர் வாணிகமரபினரேயாகும். பல்லோர் என்றதால் ஆங்காங்கும் உள்ளவாறறிக. 8

மழைமலிந் திலகும் வளநா(டு) ஒப்ப
ஏனைய நாடும் இலங்கச் செய்யும்
வணிக மாந்தர்தம் மாட்சிமை வலிதே.

மழை வளத்தால் வேளாண்மை மிகுந்து, அதனுற் பலவளமும் சிறந்து விளங்கும் ஒரு நாட்டைப்போல் மழையின்றி வறண்ட நாட்டினையும் வளநாட்டைப்போல பொருள்களையும் பண்டமாற்றின்மூலம்கொண்டும் கொடுத்தும் வளமுண்டாக்கவல்லது வாணிபம். அதைத் தொழிலாச் செய்பவர் வாணிகரான வைசியர். அவரது பெருமை மிக உயர்ந்ததென்க 9

வாரிதி குடித்து மலய மால்வரை
மீதுறை முனிக்கோன் விளம்பும் நூல்வாய்
கூரியோர் வணிகர் எனக்குலா வியதே.

கடல்நீரை உண்டு. பின் பொதியமாமலையிற்றங்கியுள்ள அகத்தியமுனிவர் இயற்றிய தமிழ்மொழியில் வணிகர் என்ற சொற்கு கூர்மையுள்ள அறிஞர் என்று கூறியுள்ளார் என்பதாம். வண்–தெளிவு மிகுதி என்பது பொருள். நீட்டல் விகாரமாகி, வாண்–என்ருயிற்று. அதனையுடையார் வாணிகர் என்றபடி சிறப்புக்கூறியதென்ருர். 10

ஆக சூத்திரம் 60

---

## ஏழாவது
## வேளாளர் தன்மை

நால்வகைக் குலத்து(ள்)ளும் நாலாங் குலத்தின்
கிளைபல வாகிக் கிளைத்துள அன்றே.

அந்தணர், அரசர், வாணிபர் என்ற மூன்றினை அடுத்து நான்காவதாக எண்ணப்படுபவர் வேளாளர். முன்னைய மூன்று பிரிவினருள்ளும் பல பிரிவுகள் உண்டு. அதுபோல வேளாள மரபிலும் பல கிளைத்துள்ளன.

கிளை என்றதால் ஆதாரமான மரம் ஒன்று என்பது தெளிவு. நாடு மொழி, தொழில் முறையில் ஆங்காங்கே சென்று தங்கிய முறையில் பலவாகக் கிளைத்து வேளாண்மரபு பிரிந்திருக்கின்றன. சோழநாட்டான் சோழிய வேளாளன் கொங்கு நாட்டான் கொங்கு வேளாளன். பாண்டநாட்டான் பாண்டி வேளாளன். துளுவ நாட்டான் துளுவ வேளாளன் என்றுஜற் போல வேறுபட்டு நாட்டோடு பழகி பண்பும் ஒழுக்கமும் பலவாயின.

இவருள் முதலியார், பிள்ளை, செட்டியார் எனமுறை செயலால் வேறுபட்டன. மேகத்துக்கேவிடுதலைபெற முன்னின்றவர் கார்காத்தார் என்றும் தொண்டைநாட்டினர், தொண்டைமண்டலத்தார் என்றும் பெயர்பெற்றனர் என்க. 1

வேளாளர் செய்யும் வியன்தொழில் பலஅவற்(று)
உழவு போலும் உறுதிஒன்(று) இன்றே.

வேளாளராவர் பல தொழிலில் ஈடுபட்டிருந்தனர். சேக்கிழார் நாயனர் அநபாய மன்னனிடம் முதலமைச்சராயிருந்தனர். திருத்தொண்டபுராணத்தில் உள்ள அடியவர் பதினெருவர் வேளாளர். திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளல் கம்பரை ஆதரித்த பெருமகனுவர். இப்படிப் பல தொழிலில் ஈடுபட்டவராயிருப்பினும், மிகச் சிறப்பாக அவர்கள் கைக்கொண்டது வேளாண்மையான பயிர்த்தொழிலேயாம் அதுபோல எதுவும் சிறப்புடையதல்ல. 2

விழுமிய மாதவர் வேதியர் தமக்கும்
உழுதொழிற் கூழே உணவாம் அன்றே.

ஐம்புலனை ஒடுக்கித் தவம் புரிபவர்க்கும், வேதவிற்பத்தியிற் சிறந்த அந்தணர்க்கும், மற்றும் அரசராதியர்க்கும் வேளாண்மையால்வரும் தானிய வகையே உணவாகும். பொன்னும் பொருளும் உணவாகாவாம். 3

செங்கோல் கொடுங்கோல் எனத்திகழ் இரண்டும்
தாற்றுக் கோலால் தரப்படு வனவே.

அரசரானவர் நன்னெறியில் செய்யும் ஆட்சிக்காயினும், தீயவழியில் புரியும் அரசுமுறைக்காயினும் துணையாயிருப்பது வேளாளர் கைப்பிடித்து உழவுபுரியும் (தாற்றுக்கோல்) மாடுகளைத் தட்டிச் செலுத்தப்படும் கோலேயாம். முட்கோலெனவும் படும். 4

மழைப்பொருட் டேனும் மாநிலம் படைத்தாற்
றெழுதல் வேளாளர் தொன்மைக் கடனே.

உலகம் செழிப்பதற்கு வேளாண்மை பெருகுதல் வேண்டும். அது பெருகுதற்கு இன்றியமையாத நீர்வளம் வேண்டும். நீர்வளம் மழைவளத்தாலமையும். மழை உரியகாலத்திற் பெய்வதற்குக் கடவுள் அருள்வேண்டும். மழையில்லையெனில் கடவுள் படைத்த நிலமிருந்தும் பயனில்லை பயிரிடும் வேளாண்மக்களிருந்தும் பயனில்லை, எனவே மழைவேண்டி உரியகாலத்திற் கடவுளை வணங்குதல் வேளாளரது பழமையான முதன்மையான கடமை. 5

காலின் றுயின் கவின்தலை யாதிய
வேதனை யுறல்போல் வேளாளர் இளைப்பின்
வேதியர் ஆதியர் மிகத்தளர் வாரே.

மனிதனுக்கு எல்லா உறுப்புகள் இருந்தாலும் கால்கள் இல்லையானால் நடக்கமுடியாது. அதனால் தலை, கை முதலியன இருந்தும் செழுமையான இன்பம்பெற அவனால் முடியாது. அதுபோல வேளாளரால் விவசாயம் செம்மைப்படவில்லையானால் வேதியராயினும், அரசராயினும் வாணியராயினும் உலகிற் செம்மையாக எவரும் வாழவே முடியாது வருந்தவே நேரும் என்க. 6

நீதிநூற் பகுதி நிகழ்த்தினோர் தம்மில்
சீரிய ஔவையும் திருவள் ளுவரும்
உழுதொழி லினுக்கே உயர்ச்சிகூ றினரே.

உலகமக்கள் தகுதியாக வாழ்வதற்கு உரிய நீதிகளை முறைப்படக் கூறிய ஔவையார், திருவள்ளுவர் என்ற இருவரும், உழவுத்தொழில் ஒன்றுக்கே உயர்வு கூறினர். தொழுதூண் சுவையில் உழுதூண் இனிது. நெற்பயிர் விளை, மேழிச்செல்வம் கோழைபடாது என்பன போல் ஔவை கூறினர். திருவள்ளுவர், உழவுச் சிறப்பை ஒரு அதிகாரமாகவே கூறினர். 7

வண்டமிழ் மதுரை மாநகர் வழுதி
கண்டதோர் சித்தர் கல்ஆனைக் கருள்
கரும்பும்வே ளாளர் கழனிப் பொருளே.

வளமான தமிழ் நாடான மதுரைமாநகரை ஆட்சிபுரிந்த பாண்டியன்முன், எல்லாம்வல்ல சித்தராக வந்த இறைவன், கல்லினலான யானை ஒன்றினுக்கு உண்ணக்கொடுத்த கரும்பானது வேளாளர் பயிரிட்ட வயலில் விளைந்ததுவேயாம். சித்தரானவர் எல்லாம் செய்ய வல்லவர். வேளாளர் விளைத்த கரும்பு இருந்ததாலேயே கல்லானைக்கு உண்ண உதவினர். யானை கல். கரும்பு கல்லல்ல. வயலில் விளைந்த கரும்பு வேளாளர் விளைவித்ததென்க. 8

சிவன்மால் ஆதிய தேவர் தாமும்
உழவால் ஆம்உண(வு) உண்குநர் ஆயின்
மற்றெவர் அதனை மறுக்கவல் லாரே.

எல்லாவற்றுக்கும் முதன்மையான சிவபிரானும், திருமாலும் மற்றைய எல்லாக் கடவுளுமே, உழவினல் விளைக்கும் உணவுப் பொருளைப் படைக்கப்பட்டு ஏற்று அன்பருக்கு அருள்புரிவரானல், மற்றைய சீவர்கள் அந்த மேழிச்செல்வத்தை எப்படி நீக்கி வாழ முடியும்? 9

பத்தியும் தவமும் பாழ்என் றிகழ்ந்து
கருமம் தானே கர்த்தா என்னும்
அவரும் உழுதொழி லதுமுதற் றெட்டுச்
செய்யும் ஆறு செகமுழு தறியுமே.

கடவுளை வழிபடுவதும், கடவுளைக் குறித்துத் தவம்புரிதலும் வீணன செயலாகும் என்பவர், அநீசுரவாதிகள். அவர்கள் தெய்வ நிந்தகராவர். அவரவர் செய்யும் தொழிலே அதற்கேற்ற பலன்தரும். கடவுள் என்று ஒன்று வேண்டாமென்பவர்கள் அத்தகையவரும், உழவுத்தொழிலை மேற்கொள்வரானல் உழவின் மேன்மை உலக முற்றுமேயறியும். நாம் கூறவேண்டியதில்லை.

உழவு செய்யாவிட்டால் உணவில்லை. உணவில்லையானல் மேற் கண்டபடி பேச உடல் வலிமையில்லை. உணர்வுமிராது. எனவே எத்தகையோர்க்கும் உயிர் ஓட்டம் தருவதென்பதாம். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்ப. உண்டிக்கு ஆதரவு வேளாண்மை. அது செய்வோர் வேளாளர் என்பதாம். 10

ஆக சூத்திரம் 70

---

## எட்டாவது

# பஞ்சமர் தன்மை

உயிர்க்கொலை ஊன்உண(வு) உடையார் எவரும்
ஐந்தாங் குலத்தினர் ஆமெனல் முறையே.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றிருந்த நாளில் மக்கள் வாழ்க்கையில் தொழில் முறைபற்றி, இனவேறுபாடு கற்பிக் கப்பட்டது. அதில் உயர்வும் தாழ்வும் அதனல் அமைந்தன. நாள டைவில் அது வலுத்துவிட்டன. எல்லாப் பொருளிலும், உயர்வு, தாழ்வு காண்கிறோம்.

நேர்இன மணியை நிரல்பட வைத்தாங்கு. என நன்னூல் கூறு வதுபோல, ஒவ்வொன்றிலும் அவை உள்ளதறிகிறோம். மிருகவகை, பறவைவகை, ஊர்வன முதலியவற்றிலும் இனவேறுபாடுண்டு. அவைகளும் ஒன்றுகூடி வாழ்வதில்லை. அஃறிணைகளிலேயே வேறு பாடு உள்ளபோது மனிதன் புறம்பாவதில்லை. அந்தணரில் பல வகை இஸ்லாமியரில், கிறித்தவரில் இப்படி ஒவ்வொன்றிலும் உள்ளது.

ஒழுக்கத்தால் அந்தணர், முதலிலும், அரசுரிமையோர் அவர் இரண்டாவதும். வாணிபமுறையோர் மூன்ருவதும், வேளாண்மை யோர் நான்காவதுமாக வகுத்தனர். ஐந்தாமவராகவுடையோர் ஒரு சாரார். அவர்க்கெனச் சில நெறிமுறைகளையும் வகுத்தனர். பிறப்

புரிமையால் எவரும் ஓரினம். செயல்முறையால் வேறுவகை. இதனை பிறப்பொக்கும். என்ற 'குறள் வலியுறுத்துதல் காண்க. ஐந்தாமவர் கொலை, புலால் உணவுடன் சேர்க்கையாக மதுவுண்பதும் உடையவராவர்.

ஒழுக்கத்தால் உயர்வு தாழ்வு ஏற்பட்டதைக்கொண்டு நோக்குவோம் ஆனால், உயிர்களைக் கூசாமல் கொலைபுரிதல், அதன் விளைவாலான புலாலை அருவருப்பின்றி உண்டல், மற்றும் தீயவை புரிதல் உடையவர் உயர்குலமென்று கருதப்படும் எவரும், தாழ்த்தப்பட்டோரான ஐந்தாவது மரபிற் சேர்க்கப்படுபவரென்பது ஞாயமென்றுர். 1

அரசன்உத் தாரம் அகிலத்(து) உள்ளார்
பலர்க்கும் உணர்த்தல் பஞ்சமர் கடனே.

அரசனது ஆணையாகவுள்ள செய்திகளை, உலக மக்களுக்குப் பறைசாற்றி அறிவிப்பது ஐந்தாங்குலத்தினர் கடமையாம். 2

நால்வகைக் குலத்து நரர்க்கும் கீழ்ப்படிந்து
ஒழுகும் பஞ்சமன் ஊறுளோன் அலனே.

அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என்றுள்ள நால்வகையான மக்கள் சொற்படி பணிவுடன் வாழ்பவன் தவறுள்ளவனல்ல. அவர்களால் மதிக்கும்படி வாழ்வான் என்பதாம். 3

கடுகள(வு) ஊனும் காதலிக் கில்லான்
ஐந்தாங் குலத்தினன் ஆயினும் அவனைச்
சீரியர் தம்மொடு சேர்க்கத் தகுமே.

சிற்றளவும்கூட, உயிர் நீங்கிய உடலின் ஊனை உண்ணாத நன்னெறியுடையவனாக, ஐந்தாங்குலத்தவன் இருப்பானேயானால், அவனை அதனை மரபு வழியில் கொள்ளாது மேன்மக்களுடன் கூட்டிக் கொள்ளத்தகும். பிறப்புரிமைபற்றி ஒதுக்கல்கூடாது. 4

நாளைப் போவான் நறுந்தமிழ்ப் பாணன்
யாழ்வல் லான்முதல் எண்ணில் பல்லோர்
ஐம்பாற் குலத்துதித்(து) அருள்அடைந் தோரே.

திருநாளைப்போவார் என்ற நந்தனர்-பாணழ்வார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆகியோர் ஐந்தாமரபிற்பிறந்தவரா யிருந்தும் தன்மையால் உயர்ந்து, இறையருள்பெற்றுச் சிறப்புற்றனர். ஒழுக்கத்தால் உயர்ந்தோராயினர். 5

கரும நூலோர் கழிப்பினும் பத்தித்
துறையினர் பஞ்சமர் தொண்டிக ளாரே.

கருமகாண்ட முறையிற் கட்டுண்ட சிலர், உயர் பண்புடையவராயினும் பஞ்சமராய்ப் பிறந்தமைபற்றி அவமதிப்பார்கள். ஆனால் அன்புநெறிப்பட்ட உத்தமர் பிறப்பைக் கருதாமல், ஒழுக்கத்தைக் கருதி ஏற்றுமகிழ்வர். உள்ளம் தூய்மையுடையது. எனவே உடலும் தூய்மையுற்றதாயமைகிறது.

தாமரை, பொன், முத்து சாமரை,கோ ரோசனை,பால்
பூமருதேன், புனுகு, சவ்வா(து)—ஆமழல் மற்று
எங்கேபிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்? என்ற கருத்தை நினைவு கூர்க. 6

கொலைபுலை பொய்மை ஆகிய கொடுந்தகை
நீத்தோன் ஒருவன் நீசக் குலத்தில்
உற்பவித் திடினும் அவையுடை யோனும்
மற்றைக் குலத்தின் மாண்புடை யோனே.

உயிர்க்கொலை, புலால்உணவு, பொய்மொழி, முதலிய தீய செயல்களை அறவேவிட்ட நல்லோன் ஒருவன், தாழ்த்தப்பட்ட மரபில் பிறந்து இருப்பவனானால், மேற்கண்ட நன்னெறியைக் கொண்டுள்ள உயர்குடிப்பிறந்தவனை விட மேலாவான் என்றார்.

ஏனெனில் இயல்பாகவே நல்லொழுக்கமுடைய மரபினன் நல்லொழுக்கமாயிருப்பது இயல்பு. மாறுபட்ட மரபிற்பிறந்த ஒருவன் இன ஒழுக்கம் என்பதை வெறுத்து நன்னெறியில் வாழ்வானானால், நத்தை வயிற்றில் பிறந்த முத்துப்போல மதித்து ஏற்கப்பெறுவான். நடுநிலையுடைய ஆன்றோரால் என்பதாம். 7

ஐந்தாங் குலத்தின் அருந்ததி கற்பில்
முதற்குலத்(து) அரிவையர் மூவிரு வோரும்
ஒஞ்சத் தக்க உயர்ச்சிஎய் தினளே.

அருந்ததி என்ற கற்பின் நல்லாள், ஐந்தாமரபிற் பிறந்தவளே. ஆனால், அருந்ததி சீரிய கற்பின் மாட்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாயினள். அவள் கணவர், வசிட்டர், பிரமன் மகனவர். இவர் சாதி வேற்றுமை பாராட்டாமல் ஏற்றனர். இவர்போல், அந்தண மரபினரான ஏழு முனிவர்களும், அவர் மனைவிமார்களும், முதற்குலம் என்ற பார்ப்பனிகளாயிருந்தும், ஐந்தாங்குலத்து அருந்ததியின் கற்பினுக்குச் சரியாக இருக்க முடியாமல் நாணமுற்றனர் என்பதாம்.

ஒஞ்சல்—நாணுதல். பாண்டிநாட்டுத் திசைச்சொல். 8

அணுவும் திரணமும் ஆதிய பிறவும்
தெய்வத்து உருஎனத் தேறி வீட்டில்
அடைந்த வேதியருக்(கு) அளவின்று, ஒருவரும்

வேள்விக் கொலையும் மிகக்கொடி தேஎன்று
ஐந்தாங் குலத்தில் அவதரித் திட்ட
ஆதிமக் களைப்போல் அறைந்திலார் ; அன்றே.

கட்புலனுக்கமையாத அணுவும், புலப்படும் புல் ஆதியனவும், தெய்வ இயல்பாய்கண்ட பேரநுபவ ஞானம்பெற்று முத்தி வீட்டில் எய்தப்பெற்ற வேதியர்கட்கு அளவில்லை ஆனால் அத்தனைபேரில் ஒருவராவது, வேள்வி யின் பெயராற் கொல்வதும் மிகத்தீது என்பதாகக் கூறவேயில்லை. ஐந்தாவது மரபிற்பிறந்த ஆதியென்பவள் வயிற்றிற்பிறந்த ஔவை, திருவள்ளுவர்போலத் துணிந்து கூறவேயில்லை. எனவே குலத்தளவிலாகும் குணம் என்பதையும் கடந்துவிட்டது இவ்விருவரது மாண்பு என்பதாம். 9

புலைகொலை பொய்மை பொருந்தி நீசக்
குலத்திலும் பிறந்த கொடியோர் தம்மைக்
காண்டலும் ஆகா தெனக்கழித் தனரே.

கொலை, புலர்ல் உணவு, பொய்மையாதிய தீச்செயலைச் செய்து தாழ்த் தப்பட்ட மரபிலும் பிறந்தவர் கொடியவர் என்றும், அவர்களைக் காண்பதும் தவறு என்றுகூட ஒதுக்கினர் முன்னோர்.

காண்பது உண்டானல், பேசுதல், ஏதோ ஒருவகையில் தொடர்பு கொள்ளல் என்று ஈடுபாடு உண்டாகுமென்ற முறையில் புறம்பாக நீக்கினர் என்றறியலாம். 10

ஆக சூத்திரம் 80

---

## ஒன்பதாவது

# கருமம் (தொழில் முறை)

வேதம் சொல்லினும், விரிஞ்சன் ஆதியர்
நேரிற் கூறினும், நீசர்க்(கு) உரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடா(து) அன்றே.

" எல்லா இடத்தும் கொலை தீது " என்றபடி உணவுக்கென்று, மருத்து வத்துக்கென்று, தெய்வத்துக்கென்று இன்னும் எதற்கென்றிருந்தாலும் உயிர்க் கொலை, புலால் உண்ணல் இரண்டும் தீயனவே என்பது ஒருதலை. இவை இரண்டும் மேன்மக்களாவார்க்கு ஏற்றதன்று. என்பதை "நீசர்க்கு உரித்தாம் கொலைபுலை " என்று விளக்கினர்.

மற்றொருசாரார், வேள்வியில் பசுபந்தனம் என்ற பெயரால் ஆட்டைக் கொன்று அதன் ஊனை தேவர்க்கென்று அவியாகப்பெய்து, உண்பவர். கொலைக்குற்றமாக அது அமையாது. மந்திர ஓசைகேட்டு அவ்வுயிர் வான் மேற் செல்கிறது. சுவர்க்கத்திற்போய் இன்பம் அடையும். செய்பவனும் அங்குசென்று இன்பம் பெறுவான் என்பர். மேலும்

இது வேத உடன்பாடு என்றும் கூறுவர். ஆகவே ஆசிரியர், வேதம் நேரே முன்வந்து கூறினுலும்சரி. பிரமன், திருமால், சிவன் இந்த மூவரே வந்து கூறினுலும் சரி. கொலைப்பாவமும், ஊன் உண்ணும் பாவமும் உயர் குலத்தார்க்கும் கூடாதென்று திறம்படக் கூறினர். கொல்லும்போது வதை தாங்காமல் துடிப்பதைக் கருணையுள்ள எவரும் மனம் பொறுக்கமாட்டார். ஊனில் என்ன தேனு வடிகிறது? அருவருப்பான நாற்றம், இரத்தம் ஆதியவைதானே. இதனை

"உண்ணுமை வேண்டும் புலால், பிறிதொன்றன்
புண்என்று உணரப் பெறின்" என்றும்,

"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணுமை நன்று"

என்று தமிழ்மறை கூறுவது காண்க. 1

சமயா தீதத் தன்மையெய் திடினும்
சவுசம் ஆதிய தணவலொண் ணுதே.

புராணசமயக் கட்டினின்றும் கடந்து, எல்லாம்ஆன பரம்பொருள் ஒன்றென்றறிந்து, ஞானம் கைவரப்பெற்றாலும், உடலில் கழிவுப் பொருளை அகற்றும்போது, சுத்தி செய்வதையும் நீக்கலாகாது.

சவுசம்–மலங்கழுவுதல், தணவல்–நீக்கல். 2

தன்குல தருமம் தாழ்ச்சிய(து) ஆகில்
விட்டு நல்லன மேவத் தகுமே.

தான் பிறந்த குல ஒழுக்கம் நடைமுறையில், கொல்லல், ஊன் உண்டல், மது அருந்தல் ஆகிய குறைபாடு உடையதாக இருப்பின், அது பிழையென்றறியும் உணர்வுடைய ஒருவன், அப்படியே இருக்க வேண்டியதில்லை. அறவே நீக்கி, நல்லோர் முறைப்படி நடக்கலாம். மேன்முறையில் உடைய ஒருவன், தீய செயலைத்தானும் கொள்ளலாகாது. 3

மேலாம் குலத்தினர் மேழி வேட்டலும்
நாலாம் குலத்தினர் நான்மறை ஓதலும்
அனையன நிகழின் அகிலம்நொந் தழுமே.

மேற்குலப் பிறப்பாளனுன அந்தணன், மேழிபிடித்து உழுதல் கூடாது. அதுபோல, தாழ்த்தப்பட்ட மரபினன், வேதம் ஓதுதல் கூடாது. இவை மாறுபட்டு, மரபு வழிதவறிச் செயல்படும்போது. உலகம் சீர்கேடு அடையும். 4

நீசர்கைக் கொடுங்கோல், நிகமர்ஊன் வேட்கை,
ஆதிய நிகழ்கால், அருந்தவம், பயிர்கள்,
பசுக்கள் ஆதியின் பயன்குறை வுறுமே.

தீயவர் அரசு புரிவதும், அந்தணர் ஊண் உண்டலும் ஆதிய தீமை நடக்கும்போது, உலகில், தவப்பண்பு, பயிர்வளம், பசுக்களி னிடம் பால் உற்பத்தி, இவை குறைந்து காணப்படும். 5

மந்திர பலத்தால் மன்னர் தாமும்
அஞ்சுற வாழ்தல் அந்தணர் கடனே.

அரசனுவான், அந்தணரது நல்லொழுக்கம் வளர்வதற்கு ஆவன செய்தல் கடமை. ஆனுல் அந்தணராவோர், தங்களது உயிரினும் மேலான பிறப்பொழுக்கம். வேதமோதல், இரக்கப்பண்பு–ஆதியவற் ருல், மன்னனும் அஞ்சி வணங்கும்படி வாழ்தல் வேண்டும். 6

மாரி குன்று வளமே கருதி
அறம்பெரிது ஈட்டல் அரசர் கடனே

உலகில் மக்கள் நலமுடன் வாழ்வதற்கு, வேளாண்மை செழித்து உற்பத்தி பெருகவேண்டும். இதற்கு மழை மிக இன்றியமையாதது. அறம் தழைத்தாலே மழை தவருமல் பெய்யும். எனவே அறச்செய லை ப் பல்லாற்ருனும் தவருது செய்தல் கடமையாகும். 7

வாய்ச்சொற் புரத்தலும், வட்டியின் ஆசை
வளராத் தன்மையும் வணிகர்தம் பாலவே.

வாணிப முறையில், சொல் தவருமலும், வட்டியில் பேராசையில் லாமலும், வாழ்வது வணிகர்கட்கு முக்கியமாகும். 8

உண்டிவேட் டோர்க்கு உதவும் ஒண்தகை
சதுர்த்தர் தன்மையில் தலையாம், அன்றே.

உணவு குறித்து, தன்பால் வந்தவர்களை அன்புடன் ஆதரித்து உணவு செய்விப்பது. வேளாளர்க்குரிய கடமையில் மிகவும் முதன் மையாக இருக்கவேண்டியதாகும். இளையான்குடிமாற நாயனுர் செய்த முறை சிந்தித்து மேற்கொள்ளத்தக்கது. 9

தவர்உவப் பனவே சத்தாம் கருமம்,
அவர்வெறுப் பனமுழு(து) அசத்தாம், அன்றே.

தவமுடையவர்கள் கூறும் நெறியாவும், நற்பயனுடையவையும், அவர்கள் அருவருப்படையும் நெறியாவும் தீப்பயன் தருவதும் ஆம் எனவே நன்மையைக்கொண்டு தீயதை விலக்கவேண்டும். 10

ஆக சூத்திரம் 90

—•—

## பத்தாவது

## உபாசனை

தெய்வ நாட்டம் சிறிதும் இல்லா
மானிடர் யாவரும் மரைமனை யாரே.

மனிதப்பிறப்பின் பயனாவது, தெய்வத்தை வணங்குதல் முதலாவதாகும். அது ஒன்று இல்லையானல், விலங்கினத்துடன் ஒப்பாவர். ஏனெனில் உண்ணல், உறங்கல், இனப்பெருக்கல் அவைகளிடமும் உள்ளன. மனிதனாக இருப்பதில் உயர்வு காணப்படல் வேண்டும். "அவைகளும் முன் அறம்பூண்டு ஒழுகுகிறது" என்பது கொலை மறுத்தல். யானை, பசு, குரங்கு, அணில், காகம், எறும்பு, சிலந்தி இவைகளும் கடவுளை வணங்கிப் பேறு பெற்ற வரலாறு இருப்பது உண்மை.

உருவமும், அருவமும், ஒன்றும் தெய்வத்
தன்மை ஆயினும், தனிமனக் கண்கொண்(டு)
உருவா நாடுதல் உத்தமம் ; அன்றே

கடவுளின் இயல்பு, உருவமாகவும், அருவமாகவும் இருப்பதாகும். இருந்தாலும், தன் மனக்கண்ணால் தியானிக்கும்போது, உருவமாகவே கருத வேண்டும். உருவம் மனதுக்குப் புலப்படும். நாம் உருவமாயிருக்கும்போது உருவ நாட்டமே உயர்வு. அன்றே–அசை. 2

தெய்வசிந் தனையே சிருக்கிளர் தவமாம்
எழுத்தை நாடல், இயமபல்மட்(டு)ம் ஆதல்
காற்றொடு முரணல் ஆகிய கடையே

கடவுள் உபாசனைக்கு, உருவத்தியானமே சிறந்தது கடவுள் மந்திர எழுத்தினைக் கருதுவது, வாயளவில் மந்திரமட்டும் செபிப்பது, மூச்சை யடக்கிச் செய்வது ஆதியன சிறந்த முறையல்ல. 3

பலவற்(று) ஒன்றெனப் பழகப் பழக
யாவும் தானு இயங்கும் ; அன்றே.

தெய்வ வடிவம் பலவுண்டென்று மயங்காமல், ஒன்றையே குறிக்கொண்டு தியானித்துவிட்டால், நாளடைவில், எல்லா வடிவமும் தெய்வம் ஒன்றுக்கே உரியன என்ற நிலைவரும். 4

எம்தே(வு) உம்தேவு எனஇகல் கின்றார்
இளம்பக் குவத்தோர் என்பது துணிவே.

இது என் தெய்வம் அது உன் தெய்வம் என்று வெவ்வேறுகக்கருதி, வாதமிடுவது, இளம் பக்குவத்தினர் (ஆரம்ப நிலையோர்) என்பவர் முறை.

எல்லாம் ஒன்றென்றுணர்பவர் முதிர்ந்த நிலையினர் என்பதைக் குறிப்பாய் உணரவைத்தார். 5

தான்ஒரு மூர்த்தி யாம்தகை வரினும்
பற்றிய உருவப் பாவனை விடானுய்க்
கண்டு தேறும் களிப்புறு தவனே
சித்திமுத் திகளின் சீர்பெறு வானே.

உபாசனை முதிர்வில் நிட்டையின் அநுபவமாக, தான் வேறின்றி, கடவுள் வடிவில் ஒன்றியிருப்பதான நிலைவரும். அப்போது, நாம் கடவுளானோம் என்று எண்ணமல், விழிப்பு வந்தவுடன் முதலில் வழிபட்ட வடிவத்தியானம், வடிவபாவனையை விடக்கூடாது இதைக் கடமையாகக்கொண்டு உபாசிப்பவனே, சித்தி முத்திகளைப் பெறத்தக்கவன். 6

வங்கந் தனைஇகழ் மடமலி வாதியும்
விடம்கொடி தென்றிகழ் வெங்கட் பணியும்
சித்திவம் பென்றிகழ் சிறுமதித் தவனும்
ஒன்றொடொன்(று) உறழ்தற் குரிய பொருளே.

ரசவாதம் செய்பவன், ஈயத்தை இகழ்வான் ஈயம் சேர்ந்தவுடன் போலித் தங்கமானுல் செம்பாகவே மாறிவிடும். எனவே உண்மைத் தங்கம் செய்பவன் ஈயத்தை இகழமாட்டான். பாம்பானது விடம் வேண்டாமென்று வெறுத்தல் கூடாது. அதுபோல சித்தியை விரும்பாத உபாசகன் சிறப்பாக மாட்டான் இவை மூன்றும் ஒவ்வொன்ரோடு ஒப்புநோக்கற்குரியன.

ரசவாதிக்கு ஈயம், பாம்புக்கு விடம், உபாசகனுக்குச் சித்தி வேண்டத்தக்க ஒப்பற்ற பொருள். இதை வெறுப்பதானது, தன் குறைவை வெளிப்படுத்தக்கூடியவை என்ற கருத்தாகும். 7

கடல்,மலை முதலாக் காண்டகும் உலகைச்
சிட்டிசெய் ததும்ஓர் சித்தி ஆமே.

உலகில், கடல்–மலை மற்றும் சராசரமான உயிர்த்தொகைகளை, உண்டாக்கியதும், இறைவன் செய்த படைப்பான சித்தியேயாம். 8

தெய்வம், கண்ணெதிர் திகழா(து) என்னும்
புன்மைத் தவத்தோர், புராணம் பலவற்(று)
எண்ணில் பலர்கண் டிட்ட தாகச்
சொல்லல்முற் றிகழ்ந்த தோடம் எய்திக்
கீழ்மைய ராகிக் கெடுவார் ; அன்றே.

உபாசனைத் திடமில்லாத சிலர், கடவுள் கண்ணின் முன்வராது என்பார்கள். அவர்கள் சிறு மதியினரேயாம். புராண வரலாறுகள் பலவும், பலர்

கண்டு பேறுபெற்றதாகவே உள்ளன. அவை யாவும் கற்பனை என்று அவற்றை இகழ்வாரானுல், அதன்பயனுகக் கேடு பல எய்தித் துன்பப் படுவார்கள். 9

கோசிகன் முதலோர்க் குறியாத் தவத்தோர்
பாவ மலிவாற் பலிநுகர் வோரே.

விஸ்வாமித்திரமுனிவர், அரசனுயிருந்து, வசிட்டரிடம் சீடனுகித் தவம் புரிந்து, பிரமன் படைப்புக்கு எதிராக, எல்லாவற்றையும் படைக்கும் ஆற்றல் பெற்றுர். இவர்போன்ற தவமுதிர்ந்தோர்களின் சிறப்பைக் கருதாமல், பாவத்தின் மிகுதியால், தவத்தையும் சித்தியையும் இகழ்ந்து, பாவத்துக்கு இரையாகிப் பழிசுமப்பார்கள். 10

ஆக சூத்திரம் 100

---

## பதினொன்றுவது

## ஞானம்

அம்பர முதல்,முழு(து) ஆகிஆ கானை
நம்பல் போலும் ஞானம்ஒன் றின்றே.

உலகிற் பரந்துள்ள வெளி முழுதும் நிறைந்தும், அப்புறப்பட்டும் உள்ள, பரம்பொருளான கடவுளை, நம்பி வழிபடுதலே ஞானம். வேறில்லை. 1

நான்என எண்ணி நலங்குலை வதினும்
நீஎனக் குறிக்கும் நிலையினி தாமே.

எல்லாம் நான், நான் என்றுபேசி, சீரழிவதைவிட, எல்லாம் கடவுள் மயம் என்று கருதும் பண்பு மிகவுயர்ந்ததாகும். 2

ஒன்றே பரம்என்று உணரார் ஞானம்
கன்(று)ஏ தம்பல காட்டும் அன்றே.

கடவுள் ஒன்றுதான் (பல அல்ல) என்று உள்ளபடி உணரும் ஞானமே சிறப்பு. அவ்வாறின்றி, பல என்று எண்ணுவோர் ஞானமுடையவரல்லர். அதனுல் அவர் மதவாதரிடம் பலவாறு மயங்கித் துன்பமடைவார்கள். 3

ஞானம்எய் தியபின் நல்லருட் சித்தியும்
முத்தியும் எய்தல் முறைமை யாமே.

கடவுள் ஒன்றேயென்று அறிந்து, அதன்பின் அருட்சித்தியைப்பெற்று உலகநலம் செய்து, பின்தான் வீடுபேறடைவது முறையாகும். தான்மட்டும் வீடுபேறடைவது முறையன்று. சிறப்புமன்று. 4

வெல்லத்(து) இனிப்பும், வேம்பின் கசப்பும்
அறிதலும், ஒருமூன் ருய கால
நிகழ்ச்சியும் அறிந்து நிகழ்த்தலும் ஞானமே.

வெல்லம் இனிப்பு, வேம்பு கசப்பு என்று பகுத்துணர்வதும், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்றறிதலும் ஞானமென்னப்பெறும். ஞானம் என்பது அறிவு என்று பொதுவாகப் பொருள்பெறும். 5

கல்வி ஞானம், கானசுர ஞானம்
முதற்பல நிகழினும், மூவா முதலொடு
கலக்குமெய் ஞானம் கடுப்பதுஒன் றின்றே.

கல்வி ஞானம், இசையின் சுருதிபேதமுணரும் ஞானம், என்று பலவிதமாக ஞானம் என்ற சொல்லைப் பயன்படுத்துவதுண்டு. அவை யாவும், அறிவின் நுண்மையைப் புலப்படுத்துவதேயாம். ஆனல் அவையெல்லாம் ஞானத்தின் நேர்வடிவமன்று. அழிவற்ற பரம்பொருளுடன் உயிர் ஒன்றுபடுவதான உண்மை ஞானத்திற்கு ஒப்பாவதில்லை. " ஞானந்தான் உருவான நாயகன் " என்பது கந்தபுராணம். 6

அஞ்ஞா னத்தில் அமிழ்தரு சிறுவர்
ஞானமுற் றேம்என நன்கு மகிழ்தலும்,
ஞானம் உற்ருேர் நாரணன் ஆதியர்
திறம்குறித்து எய்திலம் எனத்தேம் புதலும்
பழமை யாமெனப் பன்னும்முன் னூலே

முன் கூறியபடி உண்மைஞானம் பெருத சிலர், நாம் ஞானம் பெற்ருேம் என்று களிப்புறுவர். அவர் சிறியோர். ஞானம்பெற்ற பெரியோர், திருமால் ஆதியர்போல, நாம் பெறவில்லையே என ஏங்குவார். இது பழமையான முறையென்று முன்ஞேர் நூல்கள் கூறும். 7

தோற்ற மட்டில் துலங்குவ தாகி
எவ்வகைத் தேவர் இயற்கையும் காட்டும்
பிரணவ சரீரம் பெற்று வாழும்
அவனது ஞானம் அதிகம் ஆமே.

பார்வையளவில் உருவமாகத் தோன்றி, எவர் கூறும் எவ்விதான கடவுளாயும் தான் காணச்செய்வதான, பிரணவ சரீரம், (சொருப சித்தி) பெற்றுள்ளவரது ஞானம் பெருமையுடையதாம். 8

ஈனமில் பெரியோன் ஈயும் பேற்றுள்
ஞானம் போலும் நலத்ததுஒன் றின்றே.

எல்லாமான இறைவன், உயிர்கள் பெறத்தகுவதான பல நற்பேறுகளுள்

இறைவனுடன் உயிர் ஒன்றுபடுவாகி, ஞானத்தின் பயனுன முத்திப் பேற்றினைப்போன்ற நன்மை வேறில்லை. 9

மாண்டார் மீளவும், வருத்தினர் பல்லோர்,
மனிதர் யாவரும் மாமிசம் அருந்தாப்
புனிதம் எய்தப் புரிதல்மிக்(கு) உயர்வென
ஞான மெய்தி காட்டிலர் ஒருவரும்
ஆதலின், ஆண்டான் அமைத்த அளவில்
அறிவுடை யனவாம் ஆருயிர்த் திரளே.

ஞானமென்ற இறைவனருளைப் பெற்றவர் பலர். அவருள் இறந்தவர் களை மீளவும் உயிருடன் வரும்படி செய்தவர் பலர் உண்டு. ஆனல், மனிதராய் வாழ்பவர் எவரும், புலால் உண்பதான தீமையைப்பற்றி, நல்லுணர் வைப் பெறச்செய்தல் உயர்வென்று ஞானத்தைப் பயன்படுத்தவேயில்லை. இது அவர்மீது குறையில்லை. திருவருள் எவரெவரை எந்த அளவு பயனுறச் செய்ய எண்ணுமோ அவ்வளவில் அவர்கள் செயல்படுவார்கள். உயிர்கள் சுதந்தரம் உடையனவல்ல என்பதாம். 10

ஆக சூத்திரம் 110

---

### பன்னிரண்டாவது

## பொது ஞாயம்

சுத்த பூசை தோய்சரும் ஆயின்
பேயும் தெய்வம் ஆம், பிணப்பலி ஏற்கின்
தெய்வமும் பேயாம், எனும்இது திறமே.

கோயில்களில் தெய்வப்பெயரால் செய்யும் கொலைப்பூசையைத் தவிர்க்க வேண்டும் கடவுள் அன்பு ஒன்றையே ஏற்பதாகும். உயிர் யாவும் இறைவன்வாழிடம். உடல் உயிர்வாழிடம். உயிர்வதைக் கொலையை அன்புருவான தெய்வம் விரும்புவதில்லையென்க.

கோயில்களில் கொலைப்பூசையின்றி, தூய்மையான வழிபாட்டினை ஏற்ப தானல், அங்குள்ள பேய்க்கடவுளும், அன்பு வடிவான கடவுளாகும். உயிர் போன பிணப்பூசையை ஏற்பதாயிருந்தால், நல்ல கடவுட் கோயிலாயினும் உள்ளிருப்பது பேய்த்தெய்வமேயாம்.

தெய்வம் பொது-வழிபாடு செய்யுமுறையில் தெய்வமாகவும், பேயாக வும் பெயர்பெறுகிறது. உயிர்ப்பலியைத் தெய்வம் ஏற்காது. கேட்காது. அருள் விளக்கமும் பேயிடம் இராது. இது உண்மை 1

தவர்குழாம் தன்னில் ஒவ்வொரு வனும்சிற்
சிலர்க்கொரு குருவாம் எவனே ஒருவன்

ஒருசம யத்தோர்க்(கு) உரியசற் குருவாம்
அவரின்மிக்(கு) அரியான் அருட்பொதுக் குருவாம்:
இத்திறம் அருட்பேற் றீட்டினது அளவே.

இச்சூத்திரத்தில், குருவாவருவார் பலரது தன்மை கூறப்பட்டது. 1. தவம் புரிபவராயுள்ள பலருக்குள், ஒவ்வொரு தவசியும், தன்னைச் சார்ந்த தொண்டர் சிலருக்கு ஒரு குருவாயிருப்பான். அவனை நம்பித் தொண்டு புரிபவர் சிலர். 2. எங்கோ ஒரு தவசி, ஒரு குறிப்பிட்ட மதக் குருவாகி, அந்த மதத்தைச் சார்ந்த தொண்டர்கட்குக் குருவாக விளங்குவான். 3. அப்படி ஒரு மதக்குருவாவார் பலருள்ளும், எல்லாச் சமயங்கட்கும் இசைவுற்று எல்லாரும் போற்றும்படி விளங்கும் பொதுக்குருவா வருபவன். எல்லாக் குருமார்களிலும் மேம்பட்டு விளங்குவான். இதற்கெல்லாம் அவரவர் செய்த தவமும், திருவருட் பேறுமே காரணமாகும். 2

பனவனிற் சீர்த்த பஞ்சமன் ருனும்,
பஞ்சம னிற்ருழ் பனவன் ருனும்,
இருப்பார் உலகிலென்(று) இயம்பிடல் துணிவே.

ஒழுக்கம்கெட்ட அந்தணன், ஐந்தாம் மரபினனிலும் தாழ்ந்தவனுவான், பஞ்சமனென்னும் அவன், ஒழுக்கத்தின் சிறப்பினுல் அதையுடைய அந்தணனிலும் மேலாயும் இருப்பார் என்று கூறுதல் தகும். உயர்வும் தாழ்வும் ஒழுக்கமுடைமையாலும், இன்மையாலுமேயாம். பிறப்பினுல் இல்லை உயர்வும் தாழ்வும் என்பதுறுதி. 3

எத்திறல் மன்னரும் ஏங்க மிளிர்தரு
சித்தி போலும் செல்வம்ஒன்று இன்றே.

அரசர் பலரும் பல சிறப்புடனிருப்பர், அவரெல்லாம் அஞ்சும்படியான அருட்சித்தியைவிட, செல்வம் ஒன்று வேறில்லை. எனவே அதைப் பெறுவது சிறப்பு. சித்திபென்பது, சாலவித்தையல்ல. அருட்சித்தி. 4

வண்டமிழ்க் கவிகளில் வண்ணம் போலும்
ஒண்டலகை யினதின்(று) என்ப துறுதியே

பாவினங்கள் பலவற்றுள்ளும், வண்ணக்கவியே மாண்புடையது. மற்றவை மாண்பின தன்றென்பதில்லை. வண்ணம் தலைமையானது. மற்றவை அங்கம்போல்வதென்பதாம். வண்ணச்சிறப்பு கூறியபடி. 5

எந்தச் சமயமும். இறையும், குருவும்
பந்தமும், முத்தியும் பகர்வன ஆமே.

சமயங்கள் பல உலகில் உண்டு. எந்தச்சமயமாயிருந்தாலும், அவை ஒவ்வொன்றும், சமயக்கடவுள். சமயக்குரு இவரென்பதும்,

உயிரைச் சார்ந்த தளையென்றபந்தமும், வீடுபேருன முத்தியியல்பும் சொல்வனவேயாம். சிறு வேறுபாடுகள் ஒவ்வொன்றிலுமிருக்கும். சமயங்கள் யாவும் மக்கள் கொண்டு பயன்பெற ஏற்பட்டவைகளே யாம். 6

அநந்த பேதத்(து) அறுவகைச் சமயமும்
அவைமுழு(து) ஒருவலும் தழுவலும் ஆகும்
அதீத நெறிஒன்றும் ஆய ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம்ஏ ழாயவே.

அவ்வாறு சமயங்கள் பல வழியிலும், ஆறு சமயங்கள் சிறந்தன. அவை, சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணுபத்தியம், கௌமாரம், என்பவையாகும். இவற்றுடன் ஒன்றுபட்டதும் வேருவதும் ஆக அதீதம் என்று ஒன்றுண்டு. இந்த ஏழு சமய வழிபாட்டின் முறைபற்றியே, கிழமைகள் ஏழாயின என்றறிக.

| சமயம். | கிழமை. | கடவுள். |
|---|---|---|
| சௌரம் | ஞாயிறு. | சூரியன். |
| சைவம். | திங்கள். | சிவன். |
| சாத்தேயம். | செவ்வாய். | சத்தி. |
| வைணவம். | புதன். | திருமால். |
| காணுபத்தியம். | வியாழன். | கணபதி. |
| கௌமாரம். | வெள்ளி. | முருகன் (குமாரன்). |
| சமயாதீதம். | சனி. | பொதுக்கடவுள் (பரம்பொருள்). 7 |

எட்டுச் சந்தமும் இயைதரு புலமையும்
சித்திஓர் எட்டும் சேரப் பெறுவான்
கருணைஒன் றிலனேல், கடைப்படு வானே.

தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என்றுள்ள எண் வகைச் சந்தங்களிலும் கவியியற்றத்தக்க புலமையுடன் அணிமா, மகிமா, லகிமா,கரிமா,பிராத்தியம், பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்ற எட்டுச் சித்திகளையும் சேரப்பெற்றிருந்தாலும், கருணை என்ற ஒன்று இல்லாமலிருந்தால், இவையாவும் பெற்ற ஒருவன் சிறப்படையான். இவற்றையெல்லாம் பெருமல், கருணை ஒன்றைமட்டும் பெற்ற ஒருவனிலும் மேம்பாடடையான். கடைப்படுவான். இவற்றுடன் கருணையுமிருந்தால் பொன்மலர் மணம் பெற்றதுபோலாமென்க. 3

ஒருவிதச் சமயத்(து) உள்ளான் எனினும்
எச்சம யத்தும் என்தே(வு) ஒன்றே
அவரவர் மனம்போன்று அவிரும் என்னில்
அவனைப் பொதுநலத் தவர்இக ழாரே.

ஒரு சமயத்துக்குரிய ஒருவன், என் சமயத்துக்குரிய என் கடவுள் ஒன்றேதான், பல சமயத்தவர் வழிபடுகின்ற பல கடவுளாகியும் விளங்கும் என்ற கருத்துடையவனுனல், அவனைப் பொதுநலக் கருத்துடைய சமரச ஞானிகள் ஏற்றுக்கொள்வார்கள். இவனிடம் மதப்பூசலுக்குரிய பேதவாத மில்லையதனுல் என்பதாம். 9

மெலியா வீரமும், வென்றியும், மேலோர்
ஆனுர் இகழா அருட்பெருஞ் சித்தியும்,
ஞான சாரமும், நல்லநு பூதியும்,
உடையான் உலகோர்க்(கு) உய்வருள் தெய்வமே.

தளராத வீரவுணர்வு, அதனுல் வெற்றி, உயர்ந்தோரால் இகழப்படாத திருவருட்சித்தி, ஞானம், ஒழுக்கம், நல்ல அநுபவம் இவற்றை ஒருங்குபெற்ற ஒருவன், உலகமக்கட்கு நன்மையைத்தரும் தெய்வமேயாவன். தெய்வம் என்று தொடங்கி தெய்வமென்றே முடித்திருப்பது காண்க. 10

ஆக சூத்திரம் 120

முற்றிற்று.

---

நூற்பயன் – வெண்பா

பாடியலுத் தேற்பிடித்துப் பாரதியாள் பாருலகம்
கேடியலா வண்ணம் விளத்துவித்தாள்—ஈடில்புகழ்ச்
சத்திய சூத்திரநூல் சார்ந்தொழுகு வார்பலர்க்கும்
சித்திமுத்தி நல்குவதுண் டே.

மெய்யடியார் திருவடிகளே சரணம்.

தெய்வமே துணை.

உ
குருவே துணை.

# சத்திய வாசகம்.

காப்பு.

## சூத்திரம்.

சத்திய வாசகம் சாற்றும் பொருட்(டு)ஒரே
நித்தியப் பொருளை நினைந்துகை தொழுவாம்.

### நூல் உரைநடை.

சகல லோகங்களிலும் உள்ள சருவான்மாக்களுக்கும் பொதுவான தெய்வம் ஒன்றுண்டு. 1

பூரண சந்திரனைப்போன்று குளிர்ச்சிசெய்யும் கருணையும், உச்சிக் காலத்துச் சூரியனைப்போன்று சூடு செய்கின்ற நீதியும், தெய்வத்தின் திருவுள்ளத்தில் இருக்கின்றன. 2

தெய்வம் உண்டென்றும், இல்லையென்றும் கவனியாமல், ஆகாரம், நித்திரை முதலியவற்றில் சிந்தையாய்த் திரிகின்ற மிருகாதிகளினும் தாழ்ந்த பாவிகளாய், சதா தெய்வமில்லையென்று போராடுகின்றவர்களையும் ஊட்டி உறக்காட்டுகின்றதே தெய்வத்தின் கருணைக்குப் பெரிய அடையாளமாய் விளங்குகின்றது. 3

தெய்வ தண்டனைக்குக் கொஞ்சமும் பயப்படாத கொலைஞர். திருடர் முதலியோர்களையும் தண்டிக்கத்தக்க சட்டதிட்டங்களோடு அரசாட்சி செய்கின்றவர்களையும், ஒருக்கால் கொடுங்கோன்மை செய்வார்களாயின், அவர்களது இரத்தின கிரீடம் தரித்த தலைகளை நாயும் நரியும் கௌவும்படி போர்க்களத்தில் வெட்டுண்டு கிடக்கச்செய்வதே தெய்வத்தின் நீதிக்குப் போதுமான சான்றுயிருக்கின்றது. 4

தெய்வம், உருவமென்றும், அருவமென்றும், போராடுகின்றவர்கள், இரண்டுவிதமாயும் விளங்குமென்பவர் சமுகத்தில் (முன்னிலையில்) அவமதிப்படைவார்கள். 5

ஓரரசனுக்குப் பல பத்தினிகளிருப்பதுபோல், சகல சமயங்களும், தெய்வமொன்றிற்கே உரியனவாகும். 6

உயர்ந்த சமயங்களும், தாழ்ந்த சமயங்களும் உண்டென்பதே ஞாயமாகும். 7

அபிமானத்தால் பொய்யும் மெய்யும் கலந்து பேசுவது சமயவாதிகளுக்குச் சுபாவமாகும். 8

உண்மை, தெய்வத்துக்கும், அதையறிந்த ஞானவான்களுக்கும் விளங்கும். 6

தெய்வத்தை, மனத்தாலும், நேத்திரத்தாலும் கண்டு பேசத் தகும். 10

மனத்தால் தெய்வத்தைக் காண்பவர் மனச்சாட்சியான இன்பம் அனுபவிப்பார்கள். 11

நேத்திரத்தால், தெய்வத்தைக்கண்டு, வரப்பிரசாதம்பெற்ருேர் களே, பிறரும் அறியத்தக்க அற்புதங்களைச் செய்யவல்லவராவார்கள். 12

தெய்வம் சருவவல்லபம் உடையதென்று ஒப்பியும், அது கண் ணுற் காணப்படாதது என்பவர், விவேக சூனியரே ஆவர். 13

எல்லாச்சமயமும், தெய்வதெரிசனம் பெற்றவர்களால் ஏற்படுத் தப்பட்டவைகளே. 14

அபிமானமேலீட்டால், பழைய சமயம் ஒன்றைப் பலப்படுத்து கின்றவர்களும், பகைத்தன்மையால் .ஒரு சமயத்தை அழிக்கின்றவர் களும், ஆணவத்தால் ஒரு சமயத்தை உண்டுபண்ணுகின்றவர்களும் எந்தக்காலத்திலும் உண்டாவார்கள். 15

தன்னுல் ஏற்படுத்தப்பட்ட சமயம் ஒன்றே வாழவேண்டுமென முயற்சிக்கின்றவன் அகங்கார குரு எனப் பெயர் பெறுவான். 16

சீவகருணை முதலிய நல்லொழுக்கம் உடைய சமயங்கள் யாவும் வாழவேண்டுமென முயற்சிக்கின்றவன், ஞாயகுரு எனப்பெயர்பெறு வான், 17

எல்லாச் சமயங்களும் வாழவேண்டுவனவே, அவைகளில் உள்ள குற்றங்களை மாத்திரம் களையவேண்டுமென முயற்சிக்கின்றவன் பொதுக்குரு எனப்பெயர் பெறுவான். 18

ஒரே சமயம் விளங்கி மற்ற சமயங்களெல்லாம் அழிவதும், இன் னும் சில சமயங்கள் ஏற்படுவதும் சம்மதமென்பவன், சமரசகுருஎனப் பெயர் பெறுவான். 19

ஆடு முதலியவற்றைப் பீசமர்த்தனத்தால் கொன்று வெந்து தின்னவும், தெய்வம் இல்லையென்று சொல்லவும், மற்றும் காலம் கரு மம் முதலியவற்றுக்குப் பரத்துவம் சொல்லவும் தெய்வத்திற்குப் பித்தவுபரி உண்டென்னவும், திருட்டுத்தன்மை உண்டென்னவும், திருட்டுத்தன்மை உண்டென்னவும் சொல்லவும், குருவை வருத்தப் படுத்தல், நிந்தித்தல், புண்ணியமென்று சொல்லவும், சிசுக்களின் குறியிற்கொய்தல், முதலிய சடங்குகள் செய்யவும் சம்மதப்படுகின்ற சமயவாதிகள் இன்னம் ஏதாவது ஒரு விபரீதம் ஒன்றேற்படுத்தினு லும், அந்தப்பட்சத்திலும் உடன்படுவார்கள் என்பதே சித்தம். 20

எவ்விதப் பிரயாசை யெடுத்துக்கொண்டாவது ஒருவன், தெய்வ கிருபையைப் பெற்றுக்கொள்வான் ஆனுல் அவன் இவ்வுலகில் எது செய்தாலும் செய்யலாம் என்பதே திண்ணம். 21

அருட்பிரசாதம் பெற்ற ஒருவன் குற்றம் செய்தாலும், அவனையும் தெய்வம் தண்டித்தே பின்பு அருள்புரியும் என்பதற்குச் சான்று, சுந்

தரமூர்த்தி நாயனுர் நேத்திரமிழந்து. வெகுவாவருந்தி பின்பு உய்ந்து, கதி சேர்ந்தது முதலியனவாம். 22

தெய்வ கிருபையாவது, அரசர் சினேகமாவது கிடைக்கப்பெற்ருல் மிகவும் பயபத்தியாய் நடக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் கெருவம் கொண்டால் சீக்கிரத்தில் தண்டனை கிடைக்கும். 23

தெய்வத்தை நம்பிப் பாடுபட்டுத் தேறுவதைப் பார்க்கிலும், தெய்வ பத்தரை நம்புவது உத்தமமென்பதற்குச் சாட்சி, மதுரகவி ஆழ்வார்-அப்பூதியடிகள் ஆதியோர் பலராவர். 24

தெய்வம், தன்னை நம்பிய இருதிறத்தாருள் கலகம் நேரிட்டால், வலியவர்பட்சத்திற் சேர்ந்துகொண்டு மெலியவரைக் கெடுக்கும் என்பதற்குச் சாட்சி அனேகமுள்ளன. விவரம் சொன்னுல் சில சமயத்தோர் விசனப்படுவார்கள், 25

ஒரு பத்தனுல் பல உயிர்கள் முத்தியடையலாமென்பதற்கு, திருஞானசம்பந்தப்பிள்ளையார் சரித்திரமே சாட்சியாகும். 26

முத்திபடைந்தார்களென்று பலராற் சொல்லப்படும் பிறக்கின்றவர்களும் உண்டு 27

முத்திபென்பது, பல பிரயோசனங்களைப்போன்ற ஒன்றன்று. 28

சரம், அசரம் என்னும் இருவகைப் பிறப்பிற்பட்டுச் சுழல்கின்ற ஆன்மாக்களுக்கு, முத்தியைப்பார்க்கிலும் பெரும்பயன் ஒன்றுமில்லை. 29

சுவர்க்க முதலாகச் சாரூபம் வரையுள்ள ஒவ்வொரு பதவிகளையும் முத்திபென்று நம்புகின்ற மதங்கள் பலவாம். 30

சாலோக முதலிய பதவிகள் அடைந்தோர்கட்குச் சரீரம் பூமியில் விழுமென்றும், முத்திபடைந்தவர்கள் சரீரம் ஒருவர் தொட்டு எடுக்கப்படாதென்றும் சொல்வதே தீர்மானம். 31

சரீரத்துடன் மற்றொரு உலகத்துக்குப் போனவர்களைப்பற்றி, ஒருக்கால் வந்தாலும் வரலாம் என்று சந்தேகிப்பது ஞாயமே. 32

வெளி, ஒளி, விக்கிரகம் என்னும் மூன்றில், ஒன்றில் ஒன்றுபடுவோர்க்கே பிறப்பில்லையென்பது சித்தம். 33

வெளியில் அல்லமாப்பிரபு, மாணிக்கவாசகர் முதலோர் கலந்ததும், ஒளியில் சடகோபர், திருஞானசம்பந்தர் முதலோர் கலந்ததும், விக்கிரகத்தில் திருநாவுக்கரசர், திருப்பாணாழ்வார் கலந்ததும் பிரசித்தமாய் விளங்குகின்றன. 34

ஒளவையார், சுந்தரமூர்த்திநாயனுர் முதலானோர் சரீரத்துடன், இவ்வுலகத்தைவிட்டுப் போனதும் விளங்குகின்றது. 35

ஆன்ருேர் விதித்துள்ள நூல்களை நம்பாதவர்கள், பந்த மோட்ச விவகாரங்களிற் செல்லாமல் உலகாயுதன், அநீச்சுரவாதி முதலியோருடன் சேர்ந்து வேண்டுவது 36

அனேகவித நூல்களிருப்பினும், அவற்றுள் உத்தமமானவை இன்னதெனத் தெரியவேண்டுவது பெரியோர்கள் சகாயத்தாலாம். 37

தெய்வபத்தி, ஜீவகருணை முதலியவற்றை உண்டாக்குவது, உத்தம (முதல்) நூல் என்றும், அகங்காரம், சோம்பல் முதலியவற்றை உண்டாக்குவது (நடு) மத்திம நூல் என்றும், கொலைத்தொழில், பொருளாசை முதலியவற்றை உண்டாக்குவது (கடை) அதம நூலென்றும் பெரியோர்கள் சொல்வார்கள் என்பது சத்தியம். 38

உலகத்தில் பொருள்–அன்னதான முதலிய நற்செயலுக்கும் மது, மாமிசம் உண்ணல் முதலிய தீய செயல்களுக்கும் சகாயமாயிருப்பதுபோல, அருள்–சித்தி முத்திகளைக்கொடுக்கும் உத்தம குருவுக்கும், அவகீர்த்தியும் நரகமும் கொடுக்கும் அதம குருவுக்கும் சகாயமாயிருக்கும். 39

பொன், வெள்ளி, இரத்தின முதலியன பொருளென விளங்குதல்போல, மந்திரசித்தி, வாக்குசித்தி, அருட்சித்தி முதலியன அருளென விளங்குவதாகும். 40

ஒருவன் இலட்சாதிகாரியாவதன் முன் கோடீசுரன் ஆகான் என்பதுபோல, எப்படிப்பட்ட தவசியும் சித்தனாவதன்முன், முத்தனாவதில்லை. 41

ஒருக்கால் முள்ளிச்செடி முதலியன முத்தியடைந்தாற்போல, ஒருவராற் கொடுக்கப்பெற்றால் எத்தகைய உயிர்களும் முத்தியடையலாம். 42

மார்க்கண்ட முனிவர்போன்ற சிலர்மாத்திரம், கால கருமங்களைக் கடக்கலாமேயன்றி, மற்று யாவரும் அவற்றுள் கட்டுப்பட்டவர்களேயென்பது, சருவ சாத்திர சம்மதமாகும். 43

போகம், முத்தி என்னும் இரண்டுவித அநுபவங்கட்கும் திருவருட்பிரசாதமிருந்தால் உத்தமம். 44

போகாநுபவத்திற்கும் திருவருட்சகாயம் வேண்டுமோ? என்று ஐயுறுவோர், இட்ட உண்டியையெல்லாம் புசித்த குண்டோதரனையும், அனேகம் கோபியரிடம் ஒரேகாலத்தில் கூடிவாழ்ந்த கண்ணன் முதலோரையும்பற்றி யோசிக்கக்கடவர். 45

அருட்பிரசாத சித்திக்குத் தவமே ஆதாரமென்பதும், தவம் என்பது இறைவன் தியானமேயென்பதும், தெய்வம் அன்பர் பாவனைப்படி விளங்குமென்பதும், தீர்க்கவிவேகிகள் அனைவருக்கும் சம்மதம். 46

ஒருவன் ஒரு மூர்த்தியைத் தியானித்தால், முதலில் கனவிற்றோன்றி இரண்டாவதாக நிட்டையிற்றோன்றி, மூன்றாவதாக நேரில் தோன்றும். 47

கனவிலும், நிட்டையிலும் கண்டமாத்திரத்தில், திருத்தியடைந்து உருவத்தியானத்தை மறந்து மோசம்போனோர் அனேகர். 48

தெய்வத்தின் அருவலட்சணம் கருப்பஞ்சாறு போல்வதென்றுப், உருவலட்சணம் அதனால் உண்டாகும் கற்கண்டு போலுமென்றும், இவ்வாண்டில் ஒன்றை (கற்கண்டை) மற்றொன்றாக (சாறுபோல) ஆக்குதல் கூடுமாயினும், அருவத்தை (சாற்றைக் கற்கண்டின்) உருவமாக்குதல் கடினமென்றும், அறியத்தக்க விவேகிகள், ஏகதேசம் இருப்பார்கள். 49

அக விளக்கத்தில் (மனதில்) அருவ தெரிசனமும், புற (தூல) விளக்கத்தில் உருவ தெரிசனமும் சிறப்பாதலின், இவ்விரண்டு காட்சிகளையும் பெற்ற ஒருவனே, உத்தமோத்தமமான (மிகச்சிறந்த) தவசியெனப் பேர்பெற்றுச் சித்தி முத்தியென்னும் இரண்டிற்கும் உரியவனாவான். 50

தூல வெளியில் தெய்வத்தைக் கண்முன் கண்டு, வரப்பிரசாதம் பெற்று வாழ்ந்த அசுரர் முதலியோர், அக்கிரமம் செய்தபோது, மற்ற முனீச்சுரர் முதலியோர் யாவரும் அடங்கியேயிருந்த விபரத்தைக் கவனிப்பவர்களுக்கு மூர்த்தி தெரிசனத்தின் பெருமை தோன்றும். 51

சகள (உருவ) உபாசகப் பெருமையுற்றவரான சுந்தரமூர்த்தி. முதலையுண்ட பிள்ளையைச் சிலகாலம் கழித்து, வருவித்ததும், நிட்கள உபாசக மேம்பாடுற்ற தாயுமானவர், தன் சரீரத்தைக்கூட மற்றொருவன் தீய செயலால் இழந்ததும், தெய்வபத்தி செய்கின்ற வர்கள் அவசியம் சிந்திக்கவேண்டுவது. 52

ஒரு பத்தன், தனது தெய்வ வடிவத்தை மனக்கண்ணுற் கண்டு பேசி, அனேக ரகசியங்களைத் தெரிந்திருந்தாலும், உலகத்தாருக்குக் காட்டமாட்டாதவனுகவே வருந்துவான். ஆயினும் ஒருவாறு பக்குவிகளறியும்படிக்காக மகிமை விளங்கும். 53

சித்தியில் ஆசையில்லாத தவசிக்கு வீணை திருத்தி உண்டாகும். 54

சித்தியில் ஆசையுற்ற தவசி, எவ்வளவு ஞானுநுபவம் உற்ற போதும், திருத்தியடையாமல் தவமுயன்றுகொண்டேயிருப்பான். 55

திருத்தி, ஆணவத்தை உண்டுபண்ணிக் கெடுக்கும். ஐயம், அச்சத்தை உண்டுபண்ணி நன்முயற்சியிற்றூண்டும். 56

ஊழே வலிதென்போர்களும், முயற்சியே வலிதென்போர்களும், ஆகிய இருவகையோர்களும் தீர்க்க விவேவிகளல்லர். 57

ஆண் பெண் என்னும் இருவகைச் சம்பந்தத்தால் மகப்பேறுண் டாதல் போன்று, அருட்சித்தி முதலிய எவ்வகைப்பேறும் ஊழ், முயற்சி ஆகிய இரண்டுவித சம்பந்தத்தாலுமே உண்டாகுமென்பது தீர்மானமாகும். 58

ஊழ், தெய்வ வசப்பட்டதாயும், முயற்சி, உயிர்களினதுமாகத் தோற்றியபோதும், நன்முயற்சி செய்தற்கேற்ற மெய்யுணர்வைக் கொடுத்தலும், அங்ஙனம் செய்யும்படி செலுத்துவதும் தெய்வத்தின் செயல்களாலேயிருக்கின்றன. 59

மிகச்சிறந்த பெரியோர்களால் ஏற்பட்டதான '' அவனசையாமல் அணுவசையாது '' என்ற வாக்கியம், விவேவிகளின் நன் முயற்சியைக் கெடுக்காமல், மற்றையோர்களுக்குச் சோம்பல் முதலிய துர்க்குணங் களைக் கொடுத்துக் கெடுக்கும். 60

கல்விக்கடல் அளவுபடாது என்று ஒரு வார்த்தை உலகில் விளங்குகின்றதாயினும், எந்தப்புலவன் மற்றொரு புலவனைக் காணும் போது பொருமை முதலிய குணம் உதியாமல், ஆனந்தம் உதிக்கப் பெறுகின்ருனே அவன் கல்விக்கடலின் கரைகண்டவன் என்பதற்கு ஐயமில்லை. 61

கல்வியென்பது சகல நூற்களையும் கற்றுப் பிரசங்கிப்பதல்ல. தெய்வ நிச்சயமும், திருவருட்பிரசாத விருப்பமும், அதற்குத் தக்க முயற்சியும் ஏற்படப்பெறுதலேயாம். 62

தெய்வ நம்பிக்கையாகிய ஞானமும், விற்பத்திப் பெருக்கமாகிய கல்வியும் பொருந்திஞல், பொன்மலரில் வாசனையும் பொருந்திய தற்கு ஒப்பாகும். 63

அனேகம் பெண்களைச் சேர்ந்தும் மக்கட்பேறில்லாத ஒருவனும், விசேட விற்பத்தியுற்றும் கவன தாரை (நினைவாற்றல்) பெருத ஒருவனும் சமமாவார்கள். 64

மகப்பெற்ருளருமை மலடி யறியாவாறுபோல, பாவலன் அருமை பண்டிதனறியான் என்பது உண்மை. (பாவலன் – பாடுபவனும், பண்டிதன்-அதைக் கற்பவனும் ஆம்) 65

பல நூல்களைக்கற்ற புலமையுற்றும், பாடல் செய்யும் திறமை பெருதவர்கள், பாடுவோரைக் காணுந்தோறும், முன்னோர்கள் நூல் கற்றுணர்ந்தாற் போதாதா. ஏன் வீணுய்ப் பாடுகின்றீர்கள் என மறுப்பதுண்டு. 66

பூர்வகாலத்தில் பாவலர்களாற் பாடப்பெற்ற நூல்களே தற்காலத்தில், பண்டிதர்கட்கு ஆதாரமாய் விளங்குகின்றன. 67

எல்லா நூல்களுக்கும் பாவலர் பெற்றதாயும், பண்தர்கள் வளர்க்குந் தாயும் போலாவார்கள். 68

ஒருவன் பாவலத்தன்மை, பண்டிதத்தன்மை இரண்டும் அடைந்திருந்தால் மிகவும் மேலாகும். 69

அருட்பிரசாத சித்தியடையாத புலவனும், தவசியும் எவ்வித மேம்பாடுற்றிருப்பினும், பலரால் அவமதிக்கப்பட்டு வருந்துவார்கள் என்பது உண்மை. 70

அரசன் சக்கரவர்த்தியாகவும், தெய்வத்துடன் பேசுபவஞகவும், அரசாட்சித்தொழில் பெரும் துன்பவாழ்க்கை என்றுணர்ந்தோனுகவும் இருந்தால் உலகத்துககு மிகவும் நன்மையுண்டாகும். 71

மற்ருேர் அரசனுக்கஞ்சுதல், கடவுட்பண்பறியாமல், கோரகுணம், கொடுங்கோன்மை, அரசாட்சியின் பேரிறுமாப்பு, பெருங்காமம், பொருளாசை முதலான தீமை பொருந்திய அரசனது குடை நிழலைப் பார்க்கினும், நரகவேதனை மிகவும் மேன்மையுடையதாகும். 72

உலக நன்மையைக்கருதி, தனது பொக்கிஷத்துள்ள பொருளைச் செலவுசெய்கின்ற அரசர்களுக்கு நற்புகழும், தனது நன்மையின்

பொருட்டு உலகத்தார் பொருளைப் பல உபாயத்தாற் பெறுகின்ற அரசர்களுக்கு அவகீர்த்தியும் சித்திப்பது உண்மை. 73

எந்த வேளையில் நமது அரசாட்சியைச் கடவுள் மாற்றுவானோ என்றெண்ணுகின்ற அரசனே அறிவுடையவனுவதுபோல், ஒருவராலும் நம்மை வெல்ல முடியாதென்றெண்ணுகின்ற அரசனே மூடனுவான். 74

தன்னை ஆதரிப்பவர்களைப் பாதுகாக்கின்றதும், எதிர்ப்பவர்களைக் கெடுப்பதும் புலவர்களுக்கும் அரசர்களுக்கும் உரிய குணமேயாம். 75

கல்விக் கடலைக்கடந்த புலவனுக்கும், பொருட்கடலைக் கடந்த அரசனுக்கும் நாய்போன்று இனத்தைப் பகைக்கின்ற துர்க்குணம் உண்டாகாது. 76

வணிகருக்குச் சொல் தவருமையும், வேளாளருக்குப் பரோபகாரமும் முக்கியமான நற்குணமாகும். 77

ஆசை அளவுபடாதென்பது பலர் வாய்பாடாயினும், தெய்வ கிருபையால் உண்டாகத்தக்க அருட்பேற்றினுள் அடங்குவதேயாம். 78

ஐக்க முத்தியல்லாத (இறைவனுடன் ஒன்றுபடுவது தவிர) மற்றெல்லாவிதப்பேறும், மண், பெண், பொன் என்ற மூவாசையுள் அடங்குவனவேயாம். 79

பேரரசனை மண்ணுசையும், ரசவாதியைப் பொன்னுசையும், வசிய மோகன சித்திபெற்றோனைப் பெண்ணுசையும் பீடியாது. 80

அநுபவித்தாவது, வெறுத்தாவது, நிராசையை அடையப்பெற்றோரே மோட்சாரிகளென்பது சகல நூற் சம்மதமாகும். 81

நல்லோர்களுக்குக் கற்புடைய மாதர்களை இச்சிக்கின்ற பாவ கருமம் கேரிடாது. 82

அக்னிதேவனுடைய பத்தினிக்கு அருந்ததியைப்போல், உருவமெடுக்கும் வல்லமை இல்லாமற்போனதை யோசித்தால் கற்பின் பெருமை நன்கு விளங்கும். 83

அறிவுடையார் எல்லாம் உடையார் என்ற தமிழ் வேதவாக்கியம், நிறைந்த விவேகிகளால் நன்கு மதிக்கத்தக்கது. 84

தெய்வாநுகூலமில்லாத காரியம் ஒன்றும் சீர்படாது. 85

ஒரு சமயத்தின்வழியே சகுணப்பிரம்ம உபாசனை செய்கின்றவர்களுக்கே எதார்த்த ஞானம் உண்டாகும். 86

தெய்வம் ஒன்றேயென்றும், தெய்வம் இகழேல் என்றும் ஔவையார் முதலோர் சொன்ன சொற்களை விரும்பும் பக்குவமே ஞானத்தின் அடிப்படையாகும். 87

சமரச ஞானம் உண்டாகப்பெற்றும், இளம்பக்குவர்களை ஈடேற்றும் பொருட்டு ஒவ்வொரு மதங்களையும் உயர்த்தி, தனித்தனி சொல்லும் பொதுக் குருமார்களையும், ஒன்றையே வற்புறுத்தும் சிறப்புக் குருமார்களும் பலராவார். 88

சமயங்கள் அனந்தமென்றும், பன்னிரண்டென்றும் ஆன்றோர் சொல்லப்பட்டிருந்தாலும் ஆறு சமயமென்பதே திறமாம். மற்றவைகள் அவற்றின் அங்கிசங்களேயாகும். 89

சமயம் என்ற சொல்லானது, தெய்வத்தின் பண்பை விளக்கும் என்றறியும் பெரும்புலவர் ஏகதேசம் (எங்கோ சிலர்) இருப்பார்கள். 90

பல சமயங்களிலும் தெய்வங்கள் இருப்பதாகப் போராடி, தாமும் கேட்டு, பிறரையும் கெடுப்போரான புலவர் அனேகர் இருப்பார்கள். 91

(ஆறு சமயங்கள்)

சௌரம் என்ற சூரிய சமயம், ஒளித்தன்மை காட்டி நின்று அநுமார் முதலானோர்க்கு இலக்கணப் புலமை முதலான செல்வங்களைக் கொடுத்தது. 92

சைவம் என்ற சிவமயம், எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்கும் தன்மையைக்காட்டி நின்று, சனகாதியர்க்கு ஞான முதலிய பல அருட் பயன்களைக் கொடுத்தது. 93

சாத்தேயம் என்ற சத்திசமயம், பஞ்சபூத பௌதிகங்களை உண்டு பண்ணுகின்ற படைப்புத் தொழிலைக் காட்டி நின்று, கொங்கணசித்தர் முதலியோர்கட்குக் காயசித்தி (உடலழியாமலிருப்பது) முதலியவற்றைக் கொடுத்தது. 94

வைணவம் என்ற விட்டுணுசமயம், எல்லாவற்றையும் காக்கும் திதித்தொழிலைக் காட்டி நின்று, துருவன் முதலோர்க்கு காலச்சக்கர அளவை முதலியவற்றைக் கொடுத்தது. 95

காணபத்தியம் என்ற கணபதிசமயம், அன்பர்களுக்கு நேரிடும் இடையூறுகளை நீக்கும் கருணையைக் காட்டிநின்று தேவர்களுக்கு அமுதம் கிடைக்கும்படி செய்தது முதலான அருளாடலையுடையது. 96

கௌமாரம் என்ற குமாரசமயம், அகத்திய முனிவருக்கு உபதேசித்தது முதலிய குருத்தத்துவத்தை விளக்கி நின்று, சகல விரோதத்துக்கும், சமாதானத்துக்கும் ஆதாரமாய் நின்றது. 97

குரு என்றும், தெய்வமென்றும் பொதுப்படச் சொல்லும் நிலையே சமயாதீதம் என்னத்தகும். 98

குருவும், தெய்வமும் இல்லாத சமயம் இன்மையால், எல்லாச் சமயங்களும் சமயாதீதம் என்றே ஞானவான்கள் ஒப்புகின்றார்கள். 99

தெய்வம் இல்லையென்னும் சுபாபவாதி (நாத்திகர்) முதலோர்களும் குருவை ஒப்புதலால் தெய்வத்தைப் பார்க்கிலும், குரு உயர்ந்த பொருளென்றுணர்ந்தவர்கள் பெருமை அளவுபடாதென்பதுண்மை. 100

தெய்வமே குருவாவருமென்ற சொற்கு, இசைகின்ற சமயத்தவர் பலராவர். (அருபரத்தொருவன் அவனியில் வந்து குருவடிவாகி யருளிய பெருமை) என்பது மணிவாசகம். 101

பரம சற்குருவாகிய தெய்வத்தை, தன்னேடு ஒரு மனிதனைச் சொல்வார்களும் பலராவர். 102

தெரிசனமாத்திரத்தில், எல்லா நலங்களையும் கொடுப்பவரும், தவமார்க்கத்தைத் தெரிவிப்பவரும், கல்விறிவு தோற்றம் போதிப்பவரும் ஆகிய மூவித ஆசிரியரும், முறையே தரம் பிரிக்கப்படுவார்கள். 103

எவ்விதப்பட்ட நன்முயற்சியாலும் அடையத்தக்க பயன்கள், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவிதமேயாம். 104

உத்தம நூல்கள் பலவும், அற முதலிய மேற்சொன்ன புருடார்த்தங்களைப்பற்றிப் பேசுகின்றனவாகும். 105

பிதுர்தேவதைகள் (தென்புலத்தார்) என்பவர்களைப் பொருட்படுத்துவோனை இல்லறத்தானென்றும், நிராசையைப் பாதுகாப்பானைத் துறவறத்தானென்றும், கருணையைப் பெரிதாகக் கொண்டோனைப் பொதுவறத்தோனென்றும் சொல்லலாம். 106

பொன் முதலியவற்ருற் சிறந்தோனைச் செல்வப்பொருளோன் என்றும், பெரும்புலமை, நினைவாற்றல் என்பவற்ருல் சிறந்தோனைக் கல்விப்பொருளோன் என்றும் சொல்வதுண்மையாம். 107

அனேகம் பெண்கள் விரும்பிச் சேரப்பெற்ருேனைச் சிற்றின்பக்காரனென்றும், பேரரசர்களாலும் செய்தற்கரிய செயல்களைச் செய்பவனைப் பேரின்பக்காரனென்றும், இகலோக பரலோகமென்னும் இரண்டும் மறத்தற்கரிய நன்மைகளைச் செய்பவனைப் புகழின்பக்காரன் என்றும் சொல்லக்கூடும். 108

பரலோகத்தில் இந்திரபதம் வரையுள்ளவை சுவர்க்கமுத்தியென்றும், சாலோகமுதல் சாரூபம்வரையுள்ளவை பதமுத்தி என்றும், இவ்வுலகத்திலேயே வெளி, ஒளி, விக்கிரகம் என்னும் மூன்றில் ஒன்றில் தூலவுடலுடன் ஒன்றுபடுவது ஐக்கமுத்தியென்றும் பெரியோர்கள் சொல்வார்கள். 109

சித்திபெறல் அருமையென்றும், முத்திபெறல் எளிதென்றும் சொல்கின்ற ஒரு சிலரும் உலகத்தில் அதிகமாயிருக்கிருர்கள். 110

பல பிறப்பிற் சித்தனை ஒருவனே பின் முத்தனைகிருன். 111

ஞானம் ஒரு தீபமும், சித்தி அதன் ஒளியும் என்றறிவதே உண்மையறிவாகும். 112

பொருளைத் துணைக்கொண்டு, அதன்வழியே தானதருமங்களைச் செய்து ஈடேறக் கூடுமென்பதற்கு கருனன் முதலோர் சான்ருவார்கள், 113

அருள்பெற்றும் ஆணவத்தால் கெடுவாருண்டு என்பதற்கு இராவணன் முதலோர் சாட்சியாவார்கள். 114

அன்பர்கள் பாவனைப்படி எத்தனை சமயத் தெய்வங்கள் விளங்கினாலும், சிவனை விட்டுணுவை என்னும் இரண்டிற்குள் ஒடுங்கும். 115

சிவனை சிவப்பென்பதும், விட்டுணுவை பச்சையென்பதும் ஒன்றோடொன்று தொடர்புடையதென்பதும், ஒன்று ஆண், மற்றொன்று பெண் என்பதும் உபயவாதிகள் (இருவகை தரப்பினர்) சம்மதம். 116

சருவ நாம ரூப சம்பந்தமுள்ளதாயும், அவற்றிற்கு அப்புறப்பட்டதாயும் விளங்குகின்ற தெய்வம் ஒன்றென்றும் உணர்வதே பல பிறவிகளில் தவமுடித்தவர்களுக்கு உண்டாகும் உணர்ச்சியாகும். 117

கருமம், பத்தி, ஞானம் என்னு மூன்றையும் ஒப்புக்கொள்ளத்தக்க சமரச நிலையினது பெருமை பெற்றோரும், தெய்வமுமே அறியத் தக்கது. 118

சரியை கிரியை-யோகம்-ஞானம் என்னும் நான்கையும் அநுசரித்து நடக்கும் பொது நோக்கம் உடையோரை, ஒவ்வொன்றில் அபிமானித்தோர் அனைவரும் அவமதிப்பார்கள். 119

உத்தமோத்தமாகிய மிகச்சிறந்தபகுதியை இகழ்வோரும், அதமாதமமாகிய (மிகத் தாழ்வான) பகுதியைப் புகழ்வோருங்கூடச் சிலர் இருப்பார்கள். ஆதலினால் சற்குரு வாக்கியப்படி ஏன்றமாத்திரம் முயற்சித்து, மற்றைத்தொழிலற நிற்பதே விவேகிகளுக்கேற்ற நன்னிலையாம். 120

சத்தியவாசகம் முற்றிற்று.

---

## நூற்பயன் - வெண்டளைக்கலிப்பா.

சத்திய வாசகநூல் சாற்றியதும் என்செயலன்(று)
உத்தி யுடையார்கள் உள்ளபடி நன்குணர்ந்து
பத்தி நிலையிற் பதிந்திருந்து பாடுபட்டுச்
சித்திமுத்திப் பேற்றால் திருத்தி யடைவாரே.

தெய்வமே துணை.

மெய்யடியார் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.

அனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்